# கரூர் மாவட்ட திருக்கோயில்கள் வரைபடம்




N
W E
S

# திருக்கோயில்கள் வழிகாட்டி

## கரூர் மாவட்டம்



பிடியதன் உருஉமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகணபதி வர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை இறையே!

# அமைதி – வளர்ச்சி – வளமை



மாண்புமிகு தமிழக முதலமைச்சர்

புரட்சித்தலைவி **அம்மா** அவர்கள்

பூ. செந்தூர் பாண்டியன்
இந்து சமயம் மற்றும்
அறநிலையத்துறை அமைச்சர்



தலைமைச் செயலகம்,
சென்னை - 600 009.

நாள் 10.02.2014

# வாழ்த்துச் செய்தி

" ஆலயம் தொழுவது சாலவும் நன்று" என்பது ஆன்றவிந்து அடங்கிய ஆன்றோர் கூறிய அமுத மொழியாகும். அந்த அமுத மொழியை தம் வாழ்க்கையில் கடைப்பிடித்து ஆலய வழிபாடுகளை முறையாகச் செய்து மேன்மை பெற்றவர்கள் நம் முன்னோர்கள்.

மன்னவர்களும் அவர்களை அருள்வழியில் செலுத்திய இறையருள் பெற்ற முன்னவர்களும் இப்பெரு மக்களைப் பின்தொடர்ந்த பின்னவர்களும் பக்தியுடன் எழுப்பிய இறைமாளிகைகளே திருக்கோயில்களாக மிளிர்கின்றன, ஒளிர்கின்றன. நமது தமிழகத்தில் ஆயிரக்கணக்கில் திகழும் திருக்கோயில்கள் நம்பிக்கையின் சின்னங்கள்.

நம்பினார் கெடுவதில்லை – இது
நான்கு மறை தீர்ப்பு
நல்லவர்க்கும் ஏழையர்க்கும்
ஆண்டவனே காப்பு

என்னும் பாடல் வரிகள் திருக்கோயில்களின் மேன்மையைக் காட்டும் வைர வரிகள் ஆகும்.பக்தர்களுக்கு பயன்படும் வகையில் கரூர் மாவட்டத்திற்கு திருக்கோயில்கள் வழிகாட்டி ஒன்றை மாண்புமிகு தமிழக முதல்வர் புரட்சித்தலைவி அம்மா அவர்களின் ஆசியுடன் வெளியிடுவதில் மகிழ்ச்சி அடைகிறேன். சீலம் நிறைந்த கரூர் மாவட்டம் ஞாலம் போற்றும் திருக்கோயில்கள் பலவற்றைப் பெற்றுள்ளது.

கொங்கு நாட்டுச் சிவத்தலங்களில் ஆதி கருவூர். வெஞ்சமாங்கூடலூர், தாந்தோன்றிமலை, அய்யர்மலை, கடம்பர் கோவில், புகழிமலை, வெண்ணெய்மலை என பல்வேறு திருக்கோயில்கள் – திருத்தலங்கள் இம்மாவட்டத்தில் நிரம்ப உள்ளன.

இத்திருத்தலங்கள் உள்ள, திருக்கோயில்களைப் பற்றிய "திருக்கோயில்கள் வழிகாட்டி " நூலை வெளியிடுவது சிறந்ததொரு ஆன்மீகப் பணியாகும், அன்பர் பணியுமாகும்.

நூல் சிறக்க நல்வாழ்த்துக்கள்...!

P. [signature]

(பூ. செந்தூர் பாண்டியன்)

முனைவர். **இரா.கண்ணன்**, இ.ஆ.ப.,
அரசு கூடுதல் தலைமைச் செயலாளர்



சுற்றுலா, பண்பாடு மற்றும்
அறநிலையங்கள் துறை,
தலைமைச் செயலகம்,
சென்னை - 600 009.
தொலைபேசி : 044 25670820

## வாழ்த்துரை

நம் செந்தமிழ் நாட்டின்கண் திகழும் பல்லாயிரக்கணக்கான திருக்கோயில்கள் இறைவழிபாட்டுக்கு மட்டும் உரியதன்று, கலைகளை வளர்க்கும் கலைக் கூடங்களாகவும் அவை மிளிர்கின்றன. சிற்பக்கலை, ஓவியக்கலை, நடனக்கலை, கட்டடக்கலை என ஆய கலைகள் பலவற்றை ஆக்கியளித்த பன்னோக்கு மன்றங்களே திருக்கோயில்கள் ஆகும்.

" வீட்டுக்கு ஒரு மரம் வளர்ப்போம்" என்றும் "வன வளம் காப்போம்" என்றும் இன்று நாம் முழங்குகின்றோம். வனவளம் குறைந்த காரணத்தால் மழைவளம் குறைந்துவிட்டது. இஃது இன்றைய நிலை.

ஆனால், இதற்கு மாறாக திருக்கோயில்களில் தல விருட்சம் ( தலமரம் ) வளர்க்கப்பட்டது. ஒவ்வொரு கோயிலும் பல்வேறு மரங்களும், செடிகளும், கொடிகளும், மலர்களும் நிறைந்த நந்தவனமாகத் திகழ்கிறது.

" நீர் இன்றி அமையாது உலகு " என்றார் வள்ளுவப் பெருந்தகை. நீரில்லையேல் பயிரில்லை, பயிரில்லையேல் உயிரில்லை, இஃது முக்காலும் உண்மை.

நீரின் இன்றியமையாமையை நன்குணர்ந்த நம் முன்னோர்கள் திருக்கோயில்களில் தீர்வினைத் தந்தனர். திருக்கோயில்களில் வெட்டப்பட்ட தீர்த்தக் குளங்கள் தாம் அவை. திருக்கோயில்களின் தீர்த்தக் குளங்கள் நீர்ப் பிரச்சனையைத் தீர்த்து வைத்தன. கிராமத்துக் கிணறுகளுக்கு ஊற்றுக் கண்ணாய்த் திகழ்ந்தன.

மக்களின் பிரச்சினைகளை, வழக்குகளை ஆராய்ந்து தீர்த்துவைக்கும் தீர்ப்பாயங்களாகவும், நீதி மன்றங்களாகவும் திருக்கோயில்கள் இருந்திருக்கின்றன. மதுரை மீனாட்சி சொக்கநாதர் மாமனாக வந்து வழக்கு மன்றத்தில் சாட்சியளித்து ஏழை விதவையைக் காப்பாற்றியதை திருவிளையாடல் புராணம் சொல்லும். அந்த வழக்கு மன்றம் எது ? மதுரைத் திருக்கோயில் அல்லவா?

இப்படி திருக்கோயில்கள் மக்களுக்குச் செய்த சேவைகளைச் சொல்லிட சொற்கள் போதாது......

இத்திருக்கோயில்களின் மகிமையை பக்தர்கள் உணர்ந்திட ஒரு வாய்ப்பாக அமைந்துள்ளது தான் இந்நூல் .....

கரூர் மாவட்டத்தில் உள்ள பிரசித்தபெற்ற திருக்கோயில்களின் சிறப்பை இந்நூல் வழியே உணரலாம்.

கரூர் அருள்மிகு கல்யாண பசுபதீஸ்வரர் திருக்கோயில், கரூர் அருள்மிகு மாரியம்மன் திருக்கோயில், தாந்தோன்றிமலை அருள்மிகு கல்யாண வெங்கட்ரமணசுவாமி திருக்கோயில், குளித்தலை அருள்மிகு கடம்பனேசுவரசுவாமி திருக்கோயில், அய்யர்மலை அருள்மிகு இரத்தினகிரீசுவரசுவாமி திருக்கோயில் என பற்பல கோயில்களால் புகழ்பெற்ற மாவட்டம் கரூர் மாவட்டம்.

இந்நூல் பக்தர்களுக்கு ஒரு வரப்பிரசாதம், இந்நூலை நன்னூலாகக் கொண்டுவரப் பாடுபட்ட அனைவருக்கும் நல் வாழ்த்துக்கள்.

ரா கண்ணன்
28/05/2014

(முனைவர். இரா.கண்ணன் )

முனைவர் மா. வீரசண்முகமணி, இ.ஆ.ப.
ஆணையர்,
இந்து சமய அறநிலையத்துறை



119, உத்தமர் காந்தி சாலை,
நுங்கம்பாக்கம், சென்னை - 600 034.
அலுவலகம் : 044 28334815
நிகரி : 044 28334816
மின்னஞ்சல் : tn.endowments@tnhrce.org

## வாழ்த்துரை

" கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் " என்பது திருக்கோயில்கள் தொடர்பான பழமொழி ஆகும்.

கோயில்களை மையமாகக் கொண்டே தம்முடைய வசிப்பிடங்களை நம் முன்னோர்கள் அமைத்துக்கொண்டனர்.

" இரையைத் தேடுவது இவ்வுலக வாழ்க்கைக்கு'
இறையைத் தேடுவது அவ்வுலக வாழ்க்கைக்கு"

என்னும் இவ்வரிகளை தம் இரு கண்களாகக் கொண்டு வாழ்ந்தவர்கள் நம் முன்னோர்கள். இறைவன் எல்லா இடங்களிலும் நிறைந்திருப்பான். அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் விளங்குபவன் அவன். அவனது திருவருளை திருக்கோயில்களின் வழியே பெற்றனர் நம் மூதாதையர்கள்.

பசுவின் உடல் முழுவதும் பால் சத்து பரவியிருப்பினும் அப்பால் சத்தினைப் பசுவின் திருமடியிலிருந்தே நாம் பெறுகிறோம் அல்லவா ? நம் திருக்கோயில்களின் தத்துவம் இதுவே.

வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யான்எனது என்றவ ரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே!

என்ற மணிவாசகரின் மணிமொழிக்கேற்ப எல்லாம் வல்ல அந்த இறைவனை திருக்கோயில்களில் கண்டுகளித்தனர், வாழ்த்தினர், வழுத்தினர்.

திருக்கோயில்களில் எழுந்தருளியிருக்கும் கடவுளர் மீது இப்பெருமக்கள் கொண்டிருந்த அன்பிற்கு எல்லையே இல்லை.

தங்களது வசிப்பிடங்களாகிய இல்லங்களை அழியக் கூடிய தென்னங்கீற்றுக்களையும், பனையோலைகளையும், செங்கற்களையும் கொண்டு அமைத்த நம் முன்னோர்கள் இறைவனின் வசிப்பிடமான கோயில்களை மட்டும் அழிவில்லாத கருங்கற்களால் அமைத்ததை என் சொல்லிப் புகழ ?

அழிவில்லாத ஆதிக்கு அழிவில்லாத கற்றளிகள், கற்கோயில்கள்!

இத்தகு சிறப்பு மிக்க திருக்கோயில்களைப் பற்றிய விவரங்கள் அடங்கிய திருக்கோயில்கள் வழிகாட்டி நூல் வெளியிடுவது சாலச்சிறந்த ஒரு பணியாகும்.

கரூர் மாவட்டத்தில் உள்ள புகழ் பெற்ற ஆலயங்களைப் பற்றிய குறிப்புகளை இந்நூல் கொண்டுள்ளது.

திருஞானசம்பந்தரால், திருநாவுக்கரசரால், சுந்தரமூர்த்திசுவாமிகளால் பாடல் பெற்ற திருத்தலங்கள் உடையதும், அருணகிரிநாதரால் திருப்புகழ் பாடல்பெற்ற திருத்தலங்கள் உடையதும், புகழ்ச்சோழர், எறிபத்தர் நாயன்மார்களுக்கு இறைவன் கருணைபுரிந்ததுமான ஆதி கருவூர் அருள்மிகு கல்யாண பசுபதீசுவரசுவாமி திருக்கோயில், வெண்ணெய்மலை அருள்மிகு பாலசுப்பிரமணியசுவாமி திருக்கோயில், புகழிமலை அருள்மிகு முருகன் திருக்கோயில், புராதனமான தாந்தோன்றிமலை அருள்மிகு கல்யாண வெங்கட்ரமணசுவாமி திருக்கோயில், அய்யர்மலை அருள்மிகு இரத்தினகிரீசுவரசுவாமி திருக்கோயில், குளித்தலை அருள்மிகு கடம்பவனேசுவரசுவாமி திருக்கோயில் போன்ற பல்வேறு திருக்கோயில்களைப் பற்றிய தல வரலாறுகளைக் கொண்டுள்ள இந்நூல் திருக்கோயில்களின் ஆவணத்திரட்டாகவும் திகழ்கின்றது.

இந்நூல் வெளிவர உறுதுணை புரிந்த அனைவர்க்கும் நல் வாழ்த்துக்கள்!

(மா.வீரசண்முகமணி)

# முகவுரை

தொன்மை வாய்ந்த நமது கலாச்சாரத்தை நினைவுபடுத்தும் அரிய கருத்துக் கருவூலங்களாக கோயில்கள் விளங்குகின்றன. ஒவ்வொரு கோயிலுக்கும் ஒரு தனிச்சிறப்பு உண்டு என்றால் அது மிகையாகாது. எனவே, கோவில்களை போற்றி வருவது நமது கடமையாகும்.

பண்டையத் தமிழகத்தின் தலைசிறந்த நகரங்களுள் கருவூரும் ஒன்று. இந்நகரம் ஏறத்தாழ ஐயாயிரம் ஆண்டு கால வரலாற்றுப் புகழ் பெற்றது. இது சேரர்களின் கோநகரமாகத் திகழ்ந்த பெருமைக்குரியது. கோநகர் வஞ்சி எனவும் அழைக்கப்பெற்றது. வரலாற்றுப் பெருமையுடன் ஆன்மீகச் சிறப்பும் கொண்ட இம்மாநகர் முன்பு சிறந்த வணிக நகரமாகவும், தொழில் நகராகவும் விளங்கிற்று.

கரூர் மாவட்டம் தனியாக அமைக்கப்பட்டு, கரூரை தலைநகரமாக கொண்டு 30.09.1995 ஆம் தேதி முதல் கரூர் மாவட்டமாக இயங்கி வருகிறது.

கரூர் மாவட்டத்தில், கரூர், குளித்தலை, கிருஷ்ணராயபுரம், மண்மங்கலம், கடவூர், அரவக்குறிச்சி ஆகிய வட்டங்கள் உள்ளன.

கரூர் மாவட்டம் தற்சமயம் கைத்தறி துணி ஏற்றுமதியில் முக்கிய பங்கு வகித்து சுற்றியுள்ள மக்களுக்கு வேலை வாய்ப்பு அளிப்பதுடன் அன்னிய செலாவணியும் ஈட்டி வருகிறது.

கொங்கு தமிழர் ஆன்மீக ஈடுபாடு மற்றும் பக்தியினை சொல்ல வேண்டியதில்லை. அதிலும் கரூர் மாவட்ட மக்கள் பக்தி செலுத்துவதுடன் திருக்கோயில் திருப்பணியிலும் அன்னதானம் செய்வதிலும் முதன்மை வகித்து வருகின்றனர். இந்த வகையில் கரூர் மாவட்டத்தில் ஒன்பது திருக்கோயில்களில் அன்னதானத் திட்டம் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

தமிழ்நாட்டு பக்தர்களுக்கும், சுற்றுலா வரும் பயணிகளுக்கும் பயன்படும் வகையில் தெளிவான, விரிவான திருக்கோயில்கள் பயணியர் கையேடு ஒன்றை மாண்புமிகு தமிழக முதல்வர் அம்மா அவர்களின் ஆசியுடன் தமிழ்நாடு இந்து அறநிலையத் துறையின் சார்பாக வெளியிட முடிவு செய்தோம். கரூர் மாவட்ட திருக்கோயில்கள் பயணியர் வழி காட்டியான இந்த நூலில் கரூர் மாவட்டத்தில் உள்ள முக்கிய திருக்கோயில்களின் சிறப்பானச் செய்திகள் இடம் பெற்றுள்ளன.

நமது திருக்கோயில்களின் சிறப்புகளை பக்தர்கள் அறிந்து பயன்படும் வகையில் திருக்கோயில் பயணியர் கையேடு வெளியிட வேண்டும் என்ற கருத்தில், இக்கையேட்டினை உடன் வெளியிட அனுமதி வழங்கிய இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர் அவர்களுக்கும், அரசுச் செயலர் அவர்களுக்கும் மற்றும் ஆணையர் அவர்களுக்கும் நன்றி.

மேலும் இக்கையேட்டினை வெளியிட உதவிகள் புரிந்த அரியலூர் மாவட்ட உதவி ஆணையர், இக்கையேட்டிற்கு திருக்கோயில்கள் பற்றிய செய்திகள் வழங்கிய அனைத்து திருக்கோயில் செயல் அலுவலர்கள், ஆய்வாளர்கள், பரம்பரை அறங்காவலர்கள், மற்றும் திருக்கோயில் பணியாளர்கள் அனைவருக்கும் என் மனமார்ந்த நன்றி.

இதை அழகிய படங்களுடன் சிறப்பாக அச்சிட்டுத் தந்த கரூர் மாடர்ன் பிரிண்டர்ஸ் அச்சகத்தாருக்கும் நன்றி உரித்தாகுக.

இந்த நூலைப் பக்தர்களும் தெய்வீகச் சுற்றுலா வருபவர்களும் வாங்கிப் படித்து பயன் அடையுமாறு அன்புடன் வேண்டுகிறேன்.

(சி. கல்யாணி)
இணை ஆணையர்,
இந்து சமய அறநிலையத்துறை,
திருச்சிராப்பள்ளி மண்டலம்



## பொருளடக்கம்



# அருள்மிகு கல்யாண வெங்கடரமண சுவாமி திருக்கோயில்,

## தான்தோன்றிமலை, கரூர்.

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு கல்யாண வெங்கடரமண சுவாமி |
| தீர்த்தம் | சந்திர புஷ்கரணி |
| தலவிருட்சம் | வில்வம் |
| ஆகமம் | வைகானஸம் |

### தலச்சிறப்பு

குகைக்கோயில் 775 AD மற்றும் முன்மண்டபம் 12ம் நூற்றாண்டில் கட்டப்பட்டுள்ளது. சோம சர்மா என்ற பக்தருக்கு அருள்பாலித்தது. சோமசர்மா என்ற பக்தரின் வேண்டுகோளின் படி திருப்பதி செல்ல இயலாத பக்தர்கள் பிரார்த்தனையை ஏற்றுக் கொண்டு அதே பலனை வழங்குவதாக அருள் வாக்கு உள்ளது. எனவே தென் திருப்பதி என வழங்கப்படுகிறது. வேண்டுவோர்க்கு வேண்டுவன வழங்கும் பிரார்த்தனை தலமாகும். நெரூர் சதாசிவ பிரம்மேந்திரா சுவாமிகள் புரட்டாசி மாதம் மூன்றாவது சனிக்கிழமை இத்தலத்திற்கு வந்து வழிபடுவதாக ஐதீகம்.

## புராண சிறப்பு

சோமசர்மா என்ற பக்தன் திருப்பதிக்கு நடைபயணமாக வருவதாக பிரார்த்தனை செய்து கொள்கிறார். திருப்பதிக்கு செல்லும் வழியில் அமராவதி நதிக்கரையில் உடல்நிலை அவரின் நடைபயணத்திற்கு ஒத்துழைப்பு தராததால் அவர் அந்நதிக்கரையிலேயே மனவேதனை அடைந்து உறங்கி விட்டார். அவரது கனவில் நான்கு மைல் கல் தொலைவில் ஒரு குன்றின் மேல் காட்சிதருவேன் என்று அருள்பாலித்தார். இறைவன் இந்த அருள்வாக்கை ஏற்று அவர் இக்குன்றிற்கு சென்றுஅக்குன்றினை சுற்றிவந்த போது திருப்பதி வெங்கடாஜலபதி தானாக தோன்றி திருக்கல்யாண கோலத்தில் காட்சி தந்தார். இதனால் தான் கல்யாண வெங்கடரமண சுவாமி என்ற திருநாமத்தோடு அருள் பாலிக்கிறார். மேலும் குன்றின்மேல் தானாகத் தோன்றி காட்சியளித்ததால் தாந்தோன்றிமலை என பெயர் உருவாகியது.

இத்திருக்கோயிலில் வெங்கட்ரமண சுவாமி பக்தர்களின் கனவில் தோன்றி பெருமாள் கூறும் அளவிற்கு ஒரு மிதியடியை பக்தர் தைத்து வருவார். அதற்கான ஜோடி மிதியடியை அதே அளவில் வேறொரு பக்தர் தைத்து வருவார். இரு மிதியடிகளும் வியக்கத்தக்க அளவில் ஒரு சேரப்பொருந்தி இருப்பது இன்றும் கண்கூடாக நடந்து வருகிறது..

## கோயிலின் அமைப்பு

இது ஒரு குகைக் கோயில்மலையின் மேற்கு பக்கத்தில் தரை மட்டத்தில் இருந்து சுமார் 40 அடி உயரத்திற்கு மேல் உள்ள இயற்கையான பாறை குடையப்பட்டுள்ளது. பாறையில் மூலஸ்தான சிலை புடைப்பு சிற்பமாக வடிவமைக்கப்பட்டுள்ளது. சுமார் 30 அடி தூரத்திற்கு அப்பால் இருந்து நாம் பார்ப்பதால் மூலவருடைய வடிவ அமைப்பினை முழுமையாக கண், காது, மூக்கு, கை, மற்றும் விரல்கள் பாதங்கள் போன்ற பகுதிகளை தெளிவாக காணமுடியாது. இதை உணரத்தான் முடியும். அதாவது உருவ அருவுருவ வடிவம். வாயிலின் மேற்புறம் சுமார் நான்காம் பாகம் முகப்பு கூரை போன்று குடையப்பட்டுள்ளது. அந்த கூரையின் கீழ் 16 பூத தேவகண சிற்பங்கள் அழகு மிளிர உள்ளது. கூரையின் கீழ் எதிர்எதிர் நோக்கிய வண்ணம் தெற்கு வடக்கில் இரு துவார பாலகர்கள் சிலைகள் புடைப்பு சிற்பமாக காணப்படுகிறது. சன்னதி மகா மண்டபத்திற்கு இடது புறத்தில் திருக்கல்யாண மண்டபமும் வலது புறத்தில் ஆழ்வார் மண்டபமும் உள்ளது.



மகா மண்டப நுழைவு வாயிலுக்கு இருபுறமும் நேர்த்தியான இரு துவார பாலகர்களும் இடப்பக்கம் வீர ஆஞ்சநேயர் சன்னதியும் வடக்கில் வில்வமர ஆஞ்சநேயர் சன்னதியும் யாக சாலை அருகில் ஆஞ்சநேயர் சன்னதியும் உள்ளது. சன்னதிக்கு நேரே கருடாழ்வாரும் கொடிமரமும் அதற்கு கீழாக கம்பத்தடி தூணும் உள்ளது. சீரமைக்கப்பட்ட நேர்த்தியான திருக்குளம் அமைந்துள்ளது.

### திருவிழாக்கள்

தமிழ் மற்றும் தெலுங்கு வருடப்பிறப்பு, புரட்டாசி மாதத்தில் பெரும் தேர்திருவிழா, மாசி திருத்தேர் திருவிழா மற்றும் தெப்பத்திருவிழா

### திருக்கல்யாண உற்சவம்

இத்திருக்கோயிலில் பெருமாளுக்கு திருக்கல்யாண உற்சவம் நடத்தி வைத்தால் நீண்ட காலமாக தடைப்பட்டு வந்த திருமணங்கள் கை கூடி வரும். பக்தர்கள் வேண்டியபடி திருக்கல்யாண உற்சவம் செய்து வழிபட்டு வருவது சிறப்பு அம்சமாகும்.

### நடை திறப்பு நேரம்

| | | |
|---|---|---|
| | காலை | 6.00 - 1.00 மணிவரை |
| | மாலை | 3.00 - 7.00 மணிவரை |
| சனிக்கிழமை | காலை | 5.00 - 1.00 மணிவரை |
| | மாலை | 3.00 - 7.30 மணிவரை |

### பூஜை விபரம்

தினசரி நான்கு கால பூஜைகள் நடைபெற்று வருகிறது.

| | | |
|---|---|---|
| விஸ்வரூபம் | காலை | 6.00 மணி முதல் 6.30மணிவரை |
| காலைசந்தி | காலை | 8.00 மணி முதல் 8.30 மணிவரை |
| உச்சி காலம் | பகல் | 11.00 மணி முதல் 12.30 மணிவரை |
| சாயரட்சை | மாலை | 6.00 மணி முதல் 6.30 மணிவரை |

## திருக்குடமுழுக்கு

இத்திருக்கோவிலுக்கு 7.9.2014 அன்று திருக்குடமுழுக்கு சிறப்பாக நடைபெற்றது.

## அமைவிடம்

கரூரிலிருந்து குஜிலியம்பாறை செல்லும் சாலையில் 5 கி.மீ. தொலைவிலும் அமராவதி ஆற்றிற்கு தெற்கில் 2 கி.மீ. தொலைவிலும் உள்ளது.

## வழித்தடம்

கரூர் நகரிலிருந்து நகர பேருந்து, சிற்றுந்து, தானியங்கி வசதிகள் உள்ளது


தொடர்பு முகவரி

**உதவி ஆணையர் / செயல் அலுவலர்**

அருள்மிகு கல்யாண வெங்கடரமண சுவாமி திருக்கோயில்,

தாந்தோன்றிமலை. தொலைபேசி எண் : 04324 - 257531

இணையதளத்தொடர்பு : www.thanthoniperumal.tnhrce.in

மின்னஞ்சல் : thanthonriperumal@tnhrce.org




# திருக்கோயில்கள் வழிகாட்டி

## கரூர் மாவட்டம்




**தமிழ்நாடு அரசு**

**இந்து சமய அறநிலையத்துறை**

## அருள்மிகு கல்யாணபசுபதீஸ்வர சுவாமி திருக்கோயில்

கரூர்




## இராஜகோபுரம்




# அருள்மிகு கல்யாண பசுபதீசுவர சுவாமி திருக்கோயில்

## கரூர் நகர் & வட்டம்

| | |
|---|---|
| இறைவன் | அ/மி கல்யாண பசுபதீசுவரர் (ஏ) ஆனிலையப்பர் |
| இறைவி | அ/மி கிருபாநாயகி எனும் அலங்காரவல்லி<br>அ/மி வடிவுடையாள் எனும் சௌந்தரநாயகி |
| தலவிருட்சம் | வஞ்சி (அசோகம்) |
| தீர்த்தம் | ஆம்பிரநதி (அமராவதி தீர்த்தம், பிரம்ம தீர்த்தம்,<br>தாடகை தீர்த்தம், அரசதீர்த்தம், தேனு தீர்த்தம்<br>முருக தீர்த்தம் |
| நாயன்மார்கள் | புகழ்ச்சோழர், எறிபத்தர் |
| பாடல் | திருஞான சம்பந்தர் – தேவாரம்<br>கரூவூரார் – திருவிசைப்பா<br>அருணகிரிநாதர் – திருப்புகழ் |
| ஆகமம் | காரண ஆகமம், காமிக ஆகமம் |

**தலச் சிறப்பு**

திருக்கோயிலுக்கு உட்புறம் அருள்மிகு கல்யாண பசுபதீசுவரர் கிழக்கு முகமாக அருள்பாலிக்கிறார். இவரே திருக்கோயிலின் மூலவர் ஆவார். இவரை வணங்கி உள்பிரகாரத்தில் கன்னிமூலையில் ஸ்ரீ விநாயகரும் இடப்புறம் நாகேஸ்வரரும் அதே பிரகாரத்தில் வாயு மூலையில் வள்ளி, தெய்வானை சமேதராக சுப்ரமணியர் சன்னதியும், இடப்புறமாக

கரியாமாலீஸ்வரர் காந்திமதி அம்மனோடு அருள் பாலிக்கிறார்கள். கரூர் நகரின் மையத்தில் தனிக்கோயிலாக கோடீஸ்வரர் சன்னதியும் கரூர் நகரில் அமராவதி ஆற்றங்கரையில் கிழக்கு திசையில் (பிரம்மதீர்த்தம்ரோடு) கிழக்கு பார்த்துவஞ்சுலீஸ்வரர் தனிக்கோயிலிலும் அருள்பாலிக்கிறார்கள். ஆகவே இத்தலம் பஞ்சலிங்க ஸ்தலமாக அமையப்பெற்றது சிறப்பாகும். குரங்கிற்கு சோழர் குல முசுகுந்த சக்ரவர்த்தியாக தோன்ற வரம் அளித்ததும், மானுடபெண்ணான சௌந்தரநாயகி இறைவனையே திருமணம் செய்து கொண்டதும், இறைவனுக்கு கொய்த பூக்களை தட்டிவிட்ட பட்டத்து யானையை கொன்ற எறிபத்தர், யானை மற்றும் பாதுகாவலர்களை பின் உயிர் மீட்டதும், பிரம்மதேவனுக்கு சாபம் நீக்கியதும், காமதேனு தன் மடியிலிருந்து பாலை சொரிந்ததும் இத்திலத்தின் சிறப்புகளாகும்.

## ஆதி கருவூர் - கரூர் - பெயர்க்காரணம்

கொங்கேழு சிவத்தலங்களாகிய ஆதி கருவூர், வெஞ்சமாங்கூடலூர், திருமுருகன் பூண்டி, அவினாசி, திருச்செங்கோடு, பவானி, திருப்பாண்டிக்கொடுமுடி என்பனவற்றுள் முதன்மையானதாக உள்ளது ஆதி கருவூர் எனப்படும் இத்திருத்தலமாகும்.

ஆதி கருவூர் என இத்தலம் அழைக்கப்படுவதன் காரணம், உலகம் தோன்றும் போது முதன் முதலாகத் தோன்றிய ஊர் என்பதாகவும், பிரம்மன் தனது படைப்புத் தொழிலை முதன் முதலாகத் தொடங்கிய தலம் எனவும், பெருமாள் பள்ளி கொண்ட ஊராகையால் பாஸ்கரபுரம் எனவும், சோழர்களால் வெல்லப்பட்ட காலத்தே வீரசோழபுரம் எனவும், வஞ்சி மரங்கள் செறிந்திருந்தமையால் வஞ்சுளாரண்யம் எனவும், மலை, காடு, ஆறு, தீர்த்தம், நகரம், கோவில் எனும் ஆறு மங்கலப்பொருட்கள் உடையமையால் ஷண்மங்கள க்ஷேத்ரம் எனவும், ஆ (காமதேனு) வழிப்பட்டமையால் ஆனிலை எனவும், முதன்முதலில் கரு உருவான (பிரம்மனது படைப்பில் முதல் உயிர் ) காரணத்தால் கர்ப்பபுரி எனவும், கற்பங்கள் தோறும் பசுபதிநாதன் வெளிப்பட்டு மூன்று சக்திகளை நெறிப்படுத்தியும், தோன்றிய யாவற்றையும் தன்னுள் மறைத்து மீண்டும் வெளிப்படுத்துவதாலும் கரபுரம் எனவும் பல பெயர்களால் வஞ்சி எனும் கருவூர் அழைக்கப்பெறுகின்றது.

## புராணச் சிறப்பு

பதினெண்புராணங்களுள் ஒன்று பிரமகை விருத்தம். அது பல காண்டங்களை உள்ளடக்கியுள்ளது. சிவக்ஷேத்ர காண்டமெனும் பிரிவில் நூற்று ஒன்பதாவது அத்தியாயத்தில் ஆனிலையப்பர் குடி கொண்டுள்ள இக்கருவூர் தலச்சிறப்பானது கூறப்படுகின்றது.

இக்கருவூர் ஆதியில் வஞ்சிமா நகர் என்றழைக்கப்பட்ட தாகக் கூறப்படுகின்றது. சேரர்களின் தலைநகரமான வஞ்சியே கருவூர். கருவூர், வஞ்சி என்பது பற்றி பலர் ஆய்ந்து கட்டுரைகள் எழுதியுள்ளனர். மேலைக் கடற்கரையில் உள்ள கொடுங்கோளூரே வஞ்சி என சிலர் கூறினாலும், இலக்கியம் மற்றும் கல்வெட்டு ஆராய்ச்சிகளின் முடிவில் கருவூர் தான் வஞ்சி என அழைக்கப்பட்டதாக முடிவு செய்யப்படுகின்றது.

சேர மன்னர்கள் ஆண்டு வந்தது, மலைவளம் உள்ள பகுதி என்பதற்கிணங்க கருவூரைச் சுற்றி மலைகள் இருப்பதையும், கருவூரில் வஞ்சியம்மன் என்ற அம்மன் ஆலயம் இருப்பதையும் வெளிப்படைச் சான்றாகக் கொள்ளலாம்.

## எறிபத்தர் - சிவகாமியாண்டார் - புகழ்ச்சோழர்

புகழ்ச்சோழர் எனும் சோழ மன்னன் உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்த காலத்தே கருவூரில் தன் பரிவாரங்களோடு திறை வசூலிக்கும் பொருட்டு வந்து தங்கியிருந்தார். ஒரு நாள் மன்னனுடைய பட்டத்து யானை அமராவதியில் நீராடச் சென்றது. பாகர் இருவரும், மூன்று பணியாளர்களுமாக ஐந்து பேர் சென்றனர்.

அக்காலத்தே சிவகாமியாண்டார் எனும் வயது முதிர்ந்த சிவபக்தர் ஒருவர் தினமும் விடியலில் நதியில் நீராடி, நந்தவனத்துள் பூக்கொய்து குடலையில் வைத்துக்கொண்டு, ஆனிலையப்பருக்கு மாலைகள் சாற்றுவதை வழக்கமானப் பணியாக மேற்கொண்டிருந்தார். அன்றும் அவ்வாறே வந்து கொண்டிருக்கும் போது, புகழ்ச்சோழரின் பட்டத்து யானையானது பூக்குடலையை துதிக்கையாற்பற்றி கீழே எறிந்து மிதித்துச் சென்றது. சிவகாமியாண்டார் மனம் பதைத்து கண்ணீர் விட்டுச் செய்வதறியாது நின்றார். அவருடைய காலத்திலேயே எறிபத்தர் என்றொரு சிவனடியார் இருந்தார். அவருக்கு இறைத் தொண்டைக் காட்டிலும் அடியவர்கட்கு ஏற்படும் துன்பங்களைக் களைவதே சிறந்த தொண்டாகத் தெரிந்தது. எந்நேரமும் பரசு என்னும் கோடாரியைத் தன் வசம் வைத்திருப்பார்.

சிவகாமியாண்டாரது அழுகுரல் கேட்ட எறிபத்தர் விரைந்து வந்து நடந்ததறிந்து, யானை சென்ற வழியே சென்றார். யானையைக் கண்டார். அதன்பிடரியில் ஏறினார். பட்டத்து யானையின் துதிக்கையை வெட்டியதோடு மட்டுமல்லாமல், நடந்த தீச்செயலை தடுக்காமல் இருந்த பணியாளர்கள் ஐவரையும் கொன்று பழி தீர்த்தார்.

பட்டத்து யானை கொல்லப்பட்ட சேதியைக் கேட்ட மன்னன் பகைவர் வந்து விட்டனரோ? என்றெண்ணி விரைந்து குதிரையேறிச் சென்றான். பின் தொடர்ந்து பரிவாரங்களும் சென்றன. யானை மாய்ந்து கிடந்த இடத்தில் பகையாளி யாரும் காணாது, சிவனடியாராகிய எறிபத்தர் மட்டுமே நிற்கக் கண்டான். அனைவரும் இவரே பட்டத்து யானையை மாய்த்தவர் என எறிபத்தரைக் காட்ட மன்னன், ஏதோ நடந்திருக்குமென்று உணர்ந்தான்.

எறிபத்தர், மன்னன் தன்னை தண்டிப்பான் என்றெண்ணினாலும் தான் செய்தது தவறல்ல! தொண்டே என்றெண்ணி அஞ்சாமல் நின்றாரா? அல்லது தான் செய்தது தவறு. கொலைத் தொழில் புரிந்தது குற்றமென எண்ணி செய்வதறியாது நின்றாரா? என்பது தெரியவில்லை.

நடந்ததைக் கேள்வியுற்ற மன்னன், எறிபத்தரை நோக்கி வந்தான். தன் உடைவாளையெடுத்தான். யானையையும், பாகரையும் கொன்று விட்டீர். பட்டது யானையின் உரிமையாளனாகிய எனக்கும் இப்பாவத்தில் பங்கு இருக்கின்றது. என்னையும் கொல்வீராக என மன்றாடினார்.

மன்னனைத் தான் கொல்லாவிடில், மன்னன் தற்கொலை செய்து கொள்ளக்கூடும் என்றெண்ணி எறிபத்தர், இத்துணை நல்லவருக்கு தீங்கு செய்து விட்டோம்! என்றெண்ணித் தன் தலையைத் தானே, மன்னரது உடைவாளால் அரியத் தொடங்கினார். மன்னன் திகைப்படைந்து அவர் தம் செயலைத் தடுத்தான். இருவரது சிவபக்தியையும் உலகுக்கு உணர்த்திய பசுபதிநாதன், தன்னருளால் யானை, பாகர், பணியாளர்களையும் உயிர்ப்பித்ததோடு மட்டுமல்லாமல், சிவகாமியாண்டாரது பூக்குடலையையும் கொய்த பூக்களோடு மீளச் செய்து அருளினார்.

மற்றொரு நாளில் திறை வசூலுக்காக புகழ்ச்சோழர் மீண்டும் கருவூர் வந்திருந்த போது, அனைவரும் திறை செலுத்தி மன்னனைப் போற்றி நின்றனர். அப்போது மன்னன் இன்னும்

செலுத்தாதோர் யாரேனும் உள்ளனரா? என வினவினார். குறும்பொறையூர் அதியன் திறை செலுத்த மறுக்கின்றான். வலிமை மிக்க அரண் உடையவனாய் இருப்பதால் இறுமாப்போடு உள்ளான், என பதிலுரைத்தனர்.

மன்னன் அதியன் மீது போர் தொடுக்கக் கூறினார். போர் நடந்தது. அதியன் புறமுதுகிட்டு ஓடினான். போரில் கொல்லப்பட்ட படைத் தலைவர்களது தலையைக் கண்ணுற்ற அரசன் அவற்றுள் சடைமுடியோடு கூடிய ஒரு தலையினைக் கண்டான்.

என்ன பாவம் செய்தேனோ? சிவனடியாரைக் கொன்ற பாவம் அடைந்து விட்டேனே? என மனம் பதைத்து தனது செயலுக்குப் பரிகாரம் தேட விழைந்தான்.

அமைச்சரை நோக்கி, இப்பாவம் தீர நான் தீக்குளித்தலே சரியான தீர்வாகும். உடனடியாக பசுபதிநாதர் ஆலயத்துள் தீக்குழி ஏற்படுத்துங்கள். நான் தீப்புக வேண்டும் என கூறினான். அமைச்சர்கள் அரசே! இது வேண்டாம், வேறு பரிகாரம் செய்வோம். இது முறையன்று எனக் கூற மன்னன் மறுத்து தன் முடிவில் உறுதியாக நின்று, ஆனிலையப்பர் கோவிலுள் தீக்குண்டம் ஏற்படுத்தி தீப்புகுந்தான்.

தேவர்கள் பூமாரி பொழிந்து சுவர்க்கத்திற்கு அழைத்துச் சென்றனர்.

## முசுகுந்தன்

ஓரறிவு முதல் ஆறறிவு உயிர்கள் சிவனை வழிபட்டால் பலன் கிட்டும் என்பதற்கு ஐந்தறிவு பெற்ற குரங்கு ஒன்று விளையாட்டாய் வில்வ இலைகளை சிவன் மீது போட்டமையால் அரச பதவி அடைந்தது. அதுவே முசுகுந்தன் எனும் சோழ சக்கரவர்த்தியாயிற்று.

உமாதேவியுடன், சிவபெருமான் ஒரு நாள் கயிலை மலைச்சாரலில் வில்வ மரத்தரடியில் வீற்றிருந்தார். அப்போது மரத்தின் மீதிருந்த ஒரு குரங்கு விளையாட்டாய் வில்வ இலைகளை ஒவ்வொன்றாகப் போட்டது.

உமாதேவி கோபமடைந்த போது, சிவபெருமான் உமையவளை சாந்தப்படுத்தி, அது நம்மை அர்ச்சனை செய்கிறது எனக் கூறி அதற்கு நல்லுணர்வு உண்டாகுமாறு செய்தார்.

உடனே குரங்கு கீழிறங்கி, வந்து, சிவபெருமானை வணங்கி ஐயனே! அறியாது செய்த பிழையை மன்னித்தருள்க என்று கூற, சிவபெருமானோ முசுவே! என்னை அர்ச்சனை செய்தமையை யாம் ஏற்றுக்கொண்டோம். இதன் பயனாக சோழர் குலத்தில் சக்கரவர்த்தியாக தோன்றக் கடவாய் என வரமளித்தார்.

முசுவோ, அய்யனே! நான் அப்பொழுதும் இந்நிலை மறவாதிருக்க, முகம் மட்டும், குரங்கு முகமாகவே இருக்க வேண்டும் என கேட்டுக் கொண்டது.

சிவனும் அவ்வாறே ஆகட்டும் என்றருளினார். முசுகுந்தன் கரூவூரில் பிறந்து முடிசூடி ஆனிலை அண்ணலை அர்ச்சித்து வந்தார். அனைத்து சிவத்தலங்களையும் தரிசனம் செய்து வந்தார். திருவாரூரில் இருக்கும் காலத்தே, தேவேந்திரன் அசுரர்களோடு போர் புரிந்து, அமராவதியை இழந்ததைக் கேள்விப்பட்டு, தனது படைகளுடன் வானுலகம் சென்று அசுரர்களை வென்று தேவேந்திரனை மீண்டும் இந்திர பதவியில் அமர்த்தினார்.

திருமாலிடத்தில் சிவதீட்சை பெற்று கருவூர் ஆனிலை அண்ணலை வணங்கி வந்தான்.

பிறகு பிரளயம் வந்து படைப்புகள் அழிந்து மீண்டும் உயிர்கள் துவங்கிய போது, முசுகுந்தனும் பிரம்மனைப் போல் படைப்புத் தொழிலைச் செய்து வந்தான்.

அக்காலத்தே திருப்பரங்குன்றத்தில் திருமுருகனுக்கும், தெய்வானைக்கும் நடைபெற்ற திருமண வைபவத்தில் கலந்து கொள்ளும் பேறு பெற்றான். பல்லாண்டுகள் அரசாட்சி செய்து பின் தேவலோகம் சென்றான்.

கருவூருக்கு நிகரான தலமும், ஆனிலையப்பருக்கு நிகரான தெய்வமும், வில்வ அர்ச்சனைக்கு மிஞ்சிய அர்ச்சனையும் இல்லை என்பது இதன் மூலம் தெளிவாகிறது.

## சிற்பச் சிறப்பு

கொங்கேழு சிவத்தலங்களில் முதன்மையானது ஆதி கரூவூர். மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூன்று சிறப்புகளையும் உடையது. சேர, சோழ, பாண்டியர்களால் சீர்திருத்தம் பெற்றதால் அந்தந்த கால கட்டிடக்கலையை உணரலாம். கட்டிடம் கற்கோயிலமைப்பைச்சார்ந்தது.

ஏழுநிலை மாடங்களுடன் 108 அடி உயரம் கொண்டது இராஜகோபுரமாகும். பங்குனி மாதத்தில் 13, 14, 1 5 தே தி க ளி ல் சூரியன் சிவனை வழிபடுவதால் அந்நாளில் சூரியகதிர்கள் மூலவர்கள் மீது விழும்படி அமைந்துள்ளது சிறப்பு. இராஜகோபுரத்தை அடுத்த சிறிய கோபுரம் 5 மாடங்களுடன் உள்ளது. மூலவர் ஆனிலையெனும் லிங்க வடிவமானது சுயம்பு மூர்த்தியாகும்.

## இலக்கியச் சிறப்பு

திருஞானசம்பந்தர் திருப்பாண்டிக்கொடுமுடியை அடைந்து வணங்கித் தமிழ்மாலை மகிழ்ந்து சார்த்தி, வெஞ்சமாங்கூடல் விடையவர் தானம் பல போற்றிக் கிழக்கில் போந்து, திருவானிலைக் கோயிலையுடைய கருவூரை மருவி அடைந்து அக்கோயிலுட்புகுந்து இறைஞ்சிப் பாடிய நல்லிசை வண்டமிழ்ச் சொற்றொடையான

தொண்டெலாமலர் தூவி யேத்தநஞ்
சுண்டலாருயிராய தன்மையர்
கண்டனார்கரு வூருளானிலை
அண்டனாரரு ளீயு மன்பரே.

– எனத் தொடங்கும் பதிகமும்

## அருணாகிரிநாதர்

மதியால்வித் தகனாகி மனதால்உத் தமனாகி
பதிவாகிச் சிவஞான பரயோகத் தருள்வாயே
நிதியேநித் தியமேயென் நினைவேநற் பொருளாயோய்
கதியே சொற்பரவேளே கரூவூரிற் பெருமாளே.

முதலான ஏழு திருப்புகழ்களும் அருளியுள்ளார். கருவூர் தேவர் 9ஆம் திருமுறையில் திருவிசைப்பாவில் பத்து தலங்கள் மீது 10 பதிகங்கள் பாடியுள்ளார்.

## சித்தர் கருவூரார்

பதிணென் சித்தர்களில் ஒருவரான சித்தர் கருவூரார் இத்தலத்துள் தென்மேற்கு மூலையில் கோவில் கொண்டுள்ளார். மேலும் இவர் தஞ்சைப் பெரிய கோவிலுள்ளும் சமாதி கொண்டிருப்பதாகக் கூறப்படுகின்றது. இவரது உருவச் சிலை நவநீதகிரி என்னும் வெண்ணெய்மலையில் உள்ளது.


கரூவூர் சித்தர்

இவர் ஒன்பதாம் திருமுறையில் திருவிசைப்பா பாடியுள்ளார். இராஜராஜனது காலத்தில் இவர் இருந்ததற்குச் சான்றுகள் உள்ளன. இவர் தைப்பூசத்தன்று ஆனிலையப்பருடன் ஐக்கியமானதாகக் கூறப்படுகிறது. இவர் சித்த மருத்துவத்திலும் சிறந்து விளங்கினார் சிவபெருமான் கோயில் கதவு திறக்காதபோது கவிபாடித் திறப்பித்துள்ளார். திருக்குரு கூரின்கண் வாழும் நாய்களுக்கும் இவர் மோட்சமளித்ததாகக் கூறப்படுகின்றது. இராஜராஜன் தஞ்சையில் எடுத்த பெரிய கோவிலின் இலிங்கம் மருந்துஇளகியதால் கருவூரார் தனது தாம்பூலத்தால் இலிங்கத்தை ஸ்தாபனம் செய்தார். சிதம்பரம் நடராஜரது உருவச்சிலையும் போகரது ஆணையால் செய்யப்பட்டதாகும். இவரது பெருமைகள் அளவிடற்கரியன.

## கல்வெட்டுச்செய்திகள்

கருவூர் திருஆனிலைக்கோயிலில் 17 கல்வெட்டுக்கள் இருக்கின்றன. அவை வீரராஜேந்திரசோழன், மூன்றாம் குலோத்துங்கன், இராஜேந்திரசோழன், விக்ரமசோழன், இராஜராஜதேவன், வீரபாண்டியன், சுந்தரபாண்டியன், மீனாட்சி நாயக்கன் முதலிய மன்னர்களின் காலத்தவை. இவைகள் பாக்கூர், கணபதி நல்லூர், வீரசோழ நல்லூர், நெல்வேப்பள்ளி, ஆதிச்சமங்கலம் முதலிய கிராமங்களைக் கோவிலுக்கு வழங்கிய செய்தியைக் கூறுகின்றன. ஒரு கல்வெட்டில் கருவூர் வெங்கல நாட்டின் வீரசோழ மண்டலத்தின் ஒரு பகுதியாகச் சொல்லப்பட்டிருக்கிறது. கி.பி.1066 இல் வீரராஜேந்திரன் பாக்கூர் என்ற கிராமத்தைக் கோயிலுக்கு வழங்கிய செய்தியைக் கூறும் கல்வெட்டின் கடைசியில் “இத்தர்மம் காப்பான் பாதம் என் தலைமேலே” என்று மிகப்பணிவுடனும் குறித்திருப்பது நோக்கத்தக்கது.

## திருக்குடமுழுக்கு

இத்திருக்கோயிலில் 3.4.2006-ல் சுவாமி அம்பாளுக்கு ஸ்வர்ணபந்தனத்துடன் திருக்குடமுழுக்கு நடைபெற்றது.

## பிரார்த்தனை அபிஷேகம்

இத்திருக்கோயிலில் நடைபெறும் ஆறுகால பூஜைகளில் பக்தர்கள் குறிப்பிடும் காலபூஜையில் பிரார்த்தனையாக அபிஷேகம் நடத்தப்பட்டு வருகிறது.மேலும் தேய்பிறை அஷ்டமி தினத்தன்று ஸ்ரீகாலபைரவருக்கு பாலாபிஷேகமும் பௌர்ணமி காலங்களில் சித்தர் கரூவூராருக்கு பிரார்த்தனையாக அபிஷேகமும் நடத்தப்பட்டு வருகிறது.

| | |
|---|---|
| காலபூஜை அபிஷேகம் | - ரூ.750/- |
| ஸ்ரீகாலபைரவர் பாலாபிஷேகம் | - ரூ. 100/- |
| சித்தர் கருவூரார் பௌர்ணமி அபிஷேகம் | - ரூ.150/- |

## திருக்கல்யாண உற்சவம்

பக்தர்கள் குறிப்பிடும் நாளில் சுவாமி அம்பாளுக்கு திருக்கல்யாணம் பிரார்த்தனையாக செய்து வைக்கப்படுகிறது.

**திருக்கல்யாண உற்சவ கட்டணம் ரூ.2,000/-**

## திருவிழாக்கள்

பங்குனி உத்திரப் பெருவிழா, மார்கழித் திருவாதிரை, கந்தர்சஷ்டி, நவராத்திரி, சிவராத்திரி, சூரசம்ஹார ம் விழாக்களும், சங்கடஹர சதுர்த்தி, ஷஷ்டி, கிருத்திகை, பிரதோஷ நாட்கள், பைரவாஷ்டமி ஆகிய உற்சவங்கள் வெகு சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

## நடை திறக்கும் நேரம்

காலை 6.00 மணி முதல் 12.30 மணி வரை

மாலை 4.00 மணி முதல் 8.45 மணி வரை

## பூஜை காலங்கள்

இத்திருக்கோவிலில் தினமும் ஆறு கால பூஜைகள் நடைபெற்று வருகிறது.

| | |
|---|---|
| உஷக்காலம் | காலை 6.00 மணி முதல் - 6.30 மணிவரை |
| காலை சந்தி | காலை 8.00 மணி முதல் - 9.00 மணி வரை |
| பெருங்காலசந்தி | பகல் 10.00 மணி முதல் - 10.30 மணி வரை |
| உச்சிகாலம் | பகல் 12.00 மணி முதல் - 12.30 மணி வரை |
| சாயரட்சை | மாலை 5.30 மணி முதல் - 6.30 மணி வரை |
| அர்த்தஜாமம் | இரவு 8.00 மணி முதல் - 8.45 மணி வரை |

## அமைவிடம்

கரூர் நகரின் மையப்பகுதியில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

## வழித்தடம்

கரூர் நகரில் பேருந்து நிலையம் அருகில் உள்ளது. திருச்சி, திண்டுக்கல், ஈரோடு ரயில் மார்க்கம் மற்றும் பேருந்து வசதிகள் உள்ளன.

### தொடர்பு முகவரி

செயல் அலுவலர்
அ/மி கல்யாணபசுபதீஸ்வரசுவாமி திருக்கோயில்,
கரூர் நகரம், கரூர் வட்டம் (ம) மாவட்டம்
தொலைபேசி எண் : 04324 - 262010
மின்னஞ்சல் முகவரி - karurpasupathykoil@gmail.com
வலைதளமுகவரி - www.karurpasupatheeswarar.tnhrce.in

## திருவிளக்கு

'கோயில் விளங்கக் குடி விளங்கும்' என்பது பழமொழி. கோயிலுக்குச் செல்வோர், தம்மால் இயன்ற பூசைப்பொருட்களை கொடுத்து உதவுதல் சிவபுண்ணியத்தைத் தரும். அவற்றுள் திருவிளக்கு ஏற்றுதல் மேலான ஞானத்தை அளிக்கும். விரும்பி நல் விளக்குத்தூபம் விதியினால் இடவல்லார்க்குக் கரும்பினில் கட்டிபோல்வார் இறைவர் எனவும். விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்ந்நெறி ஞானமாகும் எனவும் தேவாரத்திருமுறை கூறுகிறது.

அருணாகிரிநாதரும் தீபமங்கள ஜோதீ நமோ நம என தீபத்தின் மகிமையை திருப்புகழில் எடுத்துரைக்கிறார்.

## பஞ்சபூதத் தலங்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| நீர் | - | ஜலலிங்கம் | - | திருவானைக்காவல் |
| நெருப்பு | - | அக்னிலிங்கம் | - | திருவண்ணாமலை |
| காற்று | - | வாயு லிங்கம் | - | திருக்காளத்தி |
| நிலம் | - | பிருத்வி லிங்கம் | - | காஞ்சிபுரம் |
| ஆகாயம் | - | ஆகாச லிங்கம் | - | சிதம்பரம் |




# அருள்தரும் சுரும்பார்குழலி உடனுறை அருள்மிகு இரத்தினகிரீசுவரர் திருக்கோயில்

### அய்யர்மலை, குளித்தலை, கரூர் மாவட்டம்.

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு இரத்தினகிரீசுவரர், அருள்மிகு வாட்போக்கிநாதர் அருள்மிகு இராஜலிங்க மூர்த்தி |
| இறைவி | அருள்மிகு சுரும்பார்குழலி (அராளகேஸ்வரி அம்பாள்) |
| தீர்த்தம் | காவிரி |
| தலவிருட்சம் | வேம்பு |
| ஆகமம் | காமிக ஆகமம் |

**தலச்சிறப்பு**

அப்பரால் பாடல்பெற்ற சிவாலயம் இங்கு சிவன் சுயம்பு மூர்த்தியாக அருள்பாலிக்கிறார். 1178 அடி உயரமும் 1017 படிகளும் கொண்ட மலைமீது அமைந்துள்ள மிகவும் சிறப்பு வாய்ந்த சிவத்தலம். மாசி மாதம் 3,4,5 தேதிகளில் சூரிய கிரணங்கள் சுவாமி சன்னதிக்கு நேரேயுள்ள நவதுவாரங்களின் வழியே சிவலிங்கத்தின் மீது விழுகின்றது. சுவாமிக்கு அபிஷேகம் செய்த பச்சைப்பால் அபிஷேகம் செய்த சிறிது நேரத்திலேயே கெட்டியான சுவை மிகுந்த தயிராக மாறிவிடுகிறது. இது இக்கோயிலில் இன்றுவரை நடக்கும் அதிசயமாகும். இந்த மலைக்குமேல் காகங்கள் பறப்பதில்லை. இங்கு இறைவனுக்கு கேந்திபூ சாத்துவதில்லை. மாணிக்கம் பதித்த விலை மதிப்பற்ற கிரீடம் சூட்டி கார்த்திகை மாதம் 1 ஆம் தேதி சுவாமி காட்சியளிப்பார். பாடல் பெற்ற சிவாலயங்களில் இது 64வது தேவார திருத்தலம் ஆகும். காவிரி தென்கரைத் தலங்களில் முதல் தலம் ஆகும்.

### வரலாற்றுச் சிறப்பு

இத்திருக்கோயிலில் சோழமன்னர்களான பரகேசரி இராஜேந்திர சோழன், (கி.பி. 1053 முதல் 1063வரை ) முதலாம் குலோத்துங்கன், இரண்டாம் இராஜாதி இராஜன், மூன்றாம் இராஜராஜன் காலங்களிலும், ஜடாவர்மன் சுந்தர பாண்டியன் காலத்திலும், விஜயநகர மன்னர்களில் விருப்பண்ண உடையார் II ஹொய்சால அரசர்களான வீரசோமேஸ்வரன், வீரிராமநாதன், காலங்களில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுக்கள் உள்ளன. இக்கல்வெட்டுக்களில் இறைவர் மாணிக்க மலை மகாதேவர், மாணிக்கமலை உடைய நாயனார். திருமாணிக்க மலை உடைய தம்பிரனார் என்னும் பெயர்களாலும், இறைவி திருக்காம கோட்டமுடைய பெரியநாச்சியார் எனும் பெயராலும் குறிப்பிடப் பட்டுள்ளார்

### புராணச் சிறப்பு

அகத்தியர். இந்திரன் வழிபட்டு சிறப்பு எய்திய தலம். அகத்தியர் உச்சிக்கால வழிபாடு செய்தமையால் இங்கு உச்சிக்கால வழிபாடு சிறப்பு. எனவே, சுவாமி மத்தியான சுந்தரர் என்றும் வழங்கப்படுகிறார். ஆரிய மன்னன் ஒருவன் தமது நவரத்தின கிரீடம் காணாமல் போனதால் ஈசனைத் துதிக்க, வயதான அந்தணன் ஒருவன் ரத்னகிரீசுவரிடம் அந்த கிரீடம் உள்ளதாய் தெரிவிக்க, மன்னன் ரத்னகிரீசுவரரிடம் வந்து தமது மணி முடியை தருமாறு வேண்டினான். வேதியர் வடிவில் வந்த இறைவன் இங்குள்ள கொப்பறையை முழுமையாக காவிரி நீர் கொண்டு நிரப்பினால் மணிமுடியை தருவதாக சொல்ல மன்னன் எவ்வளவோ முயன்றும் கொப்பறை நிறையாததால் கோபம் கொண்டு வேதியனை வாளால் வெட்ட முயற்சித்தான். வேதியர் சிவலிங்கத்துக்குள் மறைய, வெட்டு இலிங்கத்தில் பட்டு குருதி பீறிட்டது. தெய்வ குற்றத்துக்கு ஆளானதை எண்ணி அஞ்சிய மன்னன் தன்னைத் தானே வெட்டிக்கொள்ள முயற்சிக்க, இறைவன் அவனை தடுத்து ஆட்கொண்டு மணிமுடியையும் கொடுத்தருளினார். சுவாமிமேல் வெட்டு தழும்பு உள்ளதை இன்றும் காணலாம். வாளைப்போக்கி இரத்தினம் கொடுத்த காரணத்தால் வாட்போக்கி என பெயர் பெற்றது.

### சிற்ப சிறப்பு

இத்திருக்கோயிலில் மாசி மாதம் 3, 4, 5 ஆம் நாட்களில் சூரியன் தனது பொற்கிரணங்களால் இறைவனை வழிபடுதல் சிறப்பானதாகும்.

## தனிச்சிறப்பு

காஞ்சிபுரத்தைச் சேர்ந்த வைராக்கிய பெருமாள் தன் தங்கைக்கு குழந்தை பிறந்தால் தன் சிரசை தருவதாக வேண்டினார். அதன்படியே குழந்தை பிறந்ததும், வைரபெருமாள் தன் சிரசை அரிந்து சுவாமிக்கு காணிக்கையாக கொடுத்தார். மலைக்கு கீழே பாதமும், மேலே சிரசுடன் கூடிய முழு உருவமும் உள்ளது. தேனும், தேங்காய் பாலும் இவருக்கு தினந்தோறும் காலைசந்தி மற்றும் சாயரட்சையில் அபிஷேகம் செய்யப்படுகிறது.

ஆயர் ஒருவர் அபிஷேகத்திற்காக கொண்டு வந்த பாலை காகம் கவிழ்த்ததால் காகம் எரிந்து போயிற்று, இப்போதும், இந்த மலையின்மீது ஒரு காகம் கூட பறப்பதில்லை என்பது வியப்பான செய்தியாகும்.

காவிரி தீர்த்தம் கடம்பந்துறையிலிருந்து தினமும், கால்நடையாக 8.6 கி.மீ. தூரம் நடந்து கொண்டு வந்து சுவாமிக்கு அபிஷேகம் செய்யப்படுகிறது.

இத்திருக்கோயிலில் திருவிழாவிற்கு அர்ச்சகர் திசைக்கட்டு செய்த பின்னர் பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் கூடும் போதிலும் விஷஜந்துக்கள் ஏதும் தீண்டுவதில்லை. காலை கடம்பர், மதியம் சொக்கர், அந்தி ஈங்கோய்மலை, அர்த்தஜாமம் கருப்பத்தூர் என்பது ஆன்றோர் வாக்கு. இவ்வாறு தரிசிப்பவர்கள் பிறவாநிலை எய்துவர். இங்குள்ள பொன்னிடும் பாறைக்கு முன்புறம் உள்ள கற்கம்பத்தை சுற்றி நூலால்கட்டி பில்லி சூனியம், ஏவல், பல்வேறு தடைநீங்க பிரார்த்தனை செய்யப்படுகிறது. திருவண்ணாமலை போலவே அய்யர் மலையும், கிரிவலத்திற்கு சிறந்ததாகும்.

## திருவிழாக்கள்

சித்திரை மாதத்தில் 15 நாட்கள் திருவிழா கொண்டாடப்படும். மூன்று நாட்கள் நடைபெறும் தேரோட்டத்தின் போது பக்தர்கள் தேரோடும் வீதியிலும், மலைப்படிகளிலும், தமது வயல்களில் விளைந்த தானியங்களைத் தூவி வழிபாடு செய்வர். இதனால் விளைச்சல் பெருகும் என்பது ஐதீகம்.

தேரோட்டத்திற்கு முதல் நாள் இரவு நடைபெறும் குதிரை தேர் புகழ்பெற்றதாகும். இவ்விழாவின் போது சுவாமி தங்கக் குதிரை வாகனத்தில் புறப்பாடாகி திருத்தேருக்கு எழுந்தருள்வார்.

இத்திருக்கோயிலுக்கு செல்வோர் இறைவனை வழிபட்டபின் இந்திரனால் உண்டாக்கப்பட்ட வேப்பமரத்தையும், வைரப்பெருமாள் எனும் வீரபாகுவையும் வழிபட வேண்டும்.

## இலக்கியச்சிறப்பு

ஆடல் பாடல் உகந்த வாட்போக்கியை
வாடி ஏத்த நம் வாட்டந் தவிருமே!

என திருநாவுக்கரசர் தனது தல தேவாரப்பாடலில் பாடியுள்ளார்.

## நடைதிறக்கும் நேரம்

காலை 10.00 மணி முதல் மாலை 5.00 மணி வரை (நடைசாற்றுவது கிடையாது)

## பூஜைகாலங்கள்

தினசரி மூன்று கால பூஜைகள் நடைபெற்றுவருகிறது.

.

| | |
|---|---|
| காலை சந்தி | காலை மணி 11.00 - 12.00 |
| உச்சிக்காலம் | பகல்மணி 12.00 - 1.00 |
| சாயரட்சை | மாலை மணி 4.00 - 5.00 |

## அமைவிடம்

அய்யர்மலை, குளித்தலை வட்டம், கரூர் மாவட்டம்.

## வழித்தடம்

திருச்சி - கரூர் சாலையில் குளித்தலையிலிருந்து 8 கி.மீ. தொலைவிலும், மணப்பாறையிலிருந்து 30 கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ளது.

## தொடர்பு முகவரி

செயல் அலுவலர்
அருள்மிகு இரத்தினகிரீஸ்வரர் திருக்கோயில்,
அய்யர்மலை
சிவாயம் அஞ்சல் - 639 120.
வைகைநல்லூர் வழி,
குளித்தலை வட்டம், கரூர் மாவட்டம்.
தொலைபேசி எண் : 04323 - 245522
இணையதளம் : **www.ayyarmalai.tnhrce.in**
இமெயில் : **eoayyarmalai@gmail.com**




# அருள்மிகு கடம்பவனேசுவரர் திருக்கோயில்

## குளித்தலை, கரூர் மாவட்டம்.

| | |
|---|---|
| இறைவன்: | அருள்மிகு கடம்பவனேசுவர சுவாமி |
| இறைவி: | அருள்மிகு பாலகுஜலாம்பிகை |
| தல விருட்சம் | கடம்ப மரம் |
| தீர்த்தம்: | காவிரி, அக்னி தீர்த்தம் |
| ஆகமம் | காமிகம் |
| புராணப்பெயர் | கடம்பந்துறை, குழித்தண்டலை. |

**தலச்சிறப்பு**

இத்திருக்கோயில் 7ம் நூற்றாண்டைச் சார்ந்தது. இத்திருத்தலம் மூர்த்தி, தலம், தீர்த்தம், மூன்றிலும் சிறப்புடையது. இத்திருத்தலத்தின் மூர்த்தியான அருள்மிகு கடம்பவனநாதரை திருநாவுக்கரசர், ஐயடிகள் காடவர்கோன் ஆகியோர் பாடியுள்ளனர். இத்திருத்தலம் அருணகிரி நாதரால் திருப்புகழ் பாடப்பெற்ற பெருமையுடையது. வடநாட்டில் காசியினைப்போல தென்னாட்டில் வடக்கு நோக்கியுள்ள சிறந்த தலம் என்பதால் தட்சிணகாசி எனவும் அழைக்கப்படுகிறது. கடம்ப மரத்தை தல



விருட்சமாக கொண்டிருப்பதாலும், இப்பெருமான் சுந்தரர் என்னும் பெயர் பூண்டிருப்பதாலும், தேவசர்மாவுக்கு மதுரை திருமணக் கோலங்காட்டியதாலும், இத்தலம் மதுரையுடன் சரிநிகர் சமமாக கருதப்படுகிறது

## தல வரலாறு

தூமலோசனன் எனும் அசுரன், தேவர்களை துன்பப்படுத்தி வந்தான். அவர்கள் அம்பாளிடம், அசுரனிடம் இருந்து தங்களை காப்பாற்றும்படி வேண்டினர். அவர்களுக்காக அம்பாள் துர்க்கை வடிவம் எடுத்து அவனை அழிக்கச் சென்றாள். அசுரன் தான் பெற்றிருந்த வரத்தினால் துர்கையுடன் தொடர்ந்து சமபலத்துடன் மோதவே, துர்க்கையின் பலம் குறைந்தது.எனவே, சப்தகன்னிகைகளை அனுப்பி அசுரனுடன் போர் புரியச் செய்தாள். அவர்களை எதிர்க்க முடியாத அசுரன், அவர்களிடமிருந்து தப்பி வனத்திற்குள் ஓடினான். அங்கு கார்த்தியாயன மகரிஷியின் ஆசிரமத்திற்குள் ஒளிந்து கொண்டான். சப்த கன்னியர்களும் ஆசிரமத்திற்குள் சென்றனர். அங்கு முனிவர் தவத்தில் இருந்ததைக் கண்ட அவர்கள், தூமலோசனன்தான் முனிவர் போல் உருமாறி அமர்ந்திருப்பதாக கருதி, முனிவரை அழித்து விட்டனர். இதனால் அவர்களுக்கு பிரம்மஹத்தி தோஷம் பிடித்தது. அவர்கள் தங்களது தோஷம் நீங்க அருளும்படி அம்பாளை வேண்டினர்.

அம்பாள், இத்தலத்தில் சிவனை வேண்டிக்கொள்ள விமோசனம் கிடைக்கும் என்றாள். அதன்படி சப்தகன்னிகைகள் இங்கு வந்து தவமிருந்தனர். சிவன் அவர்களுக்கு கடம்ப மரத்தில் காட்சி தந்து சாபவிமோசனம் அருளினார்.

## தலப்பெருமை

கருவறையில் சப்தகன்னிமார்கள் : கருவறையில் லிங்கத்திற்கு பின்புறத்தில் சப்தகன்னியர்கள் இருக்கின்றனர். சிவன் சாபவிமோசனம் கொடுத்தபோது சப்தகன்னியர்கள் மீண்டும் தூமலோசனை அழித்தால் தோஷம் பிடிக்குமே என அஞ்சி, அசுரனை எதிர்க்க முன்வரவில்லை. எனவே, அசுரனை அழித்து தங்களை காக்கும்படி சிவனிடம் வேண்டிக்கொண்டனர். சிவன் அவர்களுக்கு பாதுகாப்பாக இருந்து, அசுரனையும் அழித்தார். இவர் இத்தலத்தில் சப்தகன்னிகளுக்கு பாதுகாவலராக இருப்பதாக ஐதீகம். இங்கு சுவாமிக்கு நேர் பின்புறத்தில் இருக்கும்

சாமுண்டியை, துர்க்கையாக வழிபடுகின்றனர். எனவே, துர்க்கைக்கு சன்னதி இல்லை. பெண்கள் துர்க்கைக்குரிய வழிபாட்டை சிவன் சன்னதி முன்பாகவே செய்வது விசேஷம்.

ராகு கால வேளையில் அம்பாளுக்கும், சிவனுக்கும் விசேஷ பூஜைகள் நடக்கிறது. காலையில் வணங்கவேண்டிய சிவன், இக்கோயிலில் சிவன் சுயம்புவாக, வாமதேவ முகமாக ( வடக்கு திசையை நோக்கி ) இருக்கிறார். கோமுகம் வலது புறமாக திரும்பி இருக்கிறது. கோயிலுக்கு எதிரே அகண்ட காவிரி ஓடுகிறது. சப்தகன்னிகளுக்கு சிவன், தைப்பூசத்தன்று காட்சி கொடுத்ததாக ஐதீகம்.. எனவே, அந்நாளில் இவர் காவிரியில், அம்பாளுடன் தீர்த்தவாரி கண்டருள்கிறார். இவருடன் சுற்று ஊர்களில் உள்ள 7 திருக்கோயில்களிலிருந்தும் சுவாமி அம்பாள் தீர்த்தவாரி கண்டருள்கின்றனர்.

அன்று ஒரே நாளில் 8 ஊர் சுவாமிகளையும் தரிசிக்கலாம். இத்தலத்தில் ஐப்பசி முதல் கட்ட துலாஸ்நானம் விசேஷமாக கொண்டாடப்படுகிறது. காலைக் கடம்பர், மதியம் சொக்கர் (இரத்தினகிரி), மாலை ஈங்கோய்நாதர் (திருஈங்கோய்மலை) மற்றும் அர்த்தஜாமம் சிம்மபுரீஸ்வரர் என்ற வரிசையில் வழிபடுவது குறைவில்லாத பலன்கள் கிடைக்கும் என்கின்றனர். அதன்படி, இவரை காலை வேளையில் வழிபட்டால் காசியில் வழிபட்ட பலன்கள் கிடைக்கும் என்பது நம்பிக்கை. இத்தலத்திற்கு "தெட்சிணகாசி" என்றொரு பெயரும் உண்டு.

அகத்தியர்,கண்ணுவ முனிவர் ஆகியோர் சுவாமியை வழிபட்டுள்ளனர். அம்பாள் முற்றிலா முலையம்மை தனிச் சன்னதியில் கிழக்கு பார்த்தபடி இருக்கிறாள். இச்சன்னதிக்கு முன்புறம் " பரமநாதர் " காவல் தெய்வமாக இருக்கிறார். இவர் தனது வலது கையை நெற்றி மேல் வைத்து, மரியாதை செய்தபடி வித்தியாசமான கோலத்தில் இருக்கிறார். இவருக்கு தேன் அபிஷேகம் செய்து, பாசிப்பருப்பு பாயசம் படைத்து வழிபடுகிறார்கள். இவ்வாறு செய்வதால் அவர்கள் குடும்பத்திற்கு சுவாமி பாதுகாப்பாக இருப்பார் என நம்புகிறார்கள்.

### சிற்பச் சிறப்பு

சூரபத்மனை வதம் செய்த தோஷம் நீங்க முருகன் இங்கு சுவாமியை வழிபட்டுள்ளார். இவர் பிரகாரத்தில் ஆறுமுகங்களுடன் சுப்பிரமணியராக வள்ளி தெய்வானையுடன் தனிச் சன்னிதியில் காட்சி தருகிறார். " ஆறுபடைகளிலும் இருக்கும் முருகனைப் போன்ற அமைப்புடையவர் " என்ற பொருளில் இவரைக் குறித்து

அருணகிரிநாதர் திருப்புகழ் பாடியுள்ளார். இவரது சன்னதிக்கு நேர் எதிரே, சிவன் கருவறை கோஷ்டத்தில் லிங்கோத்பவர் இருக்கிறார். இவருக்கு இருபுறமும் மகாவிஷ்ணு, பிரம்மா ஆகியோர் வணங்கியபடி இருக்கின்றனர். இக்கோயிலில் நடராஜர் சன்னதியில் இரண்டு நடராஜர்கள் இருக்கின்றனர். இவர்களில் ஒருவரது பாதத்தின்கீழ் முயலகன் இல்லை. இவரது தலையில் பிறைச்சந்திரன் இருக்கிறார்.

## இலக்கியச்சிறப்பு

அரிய நான்மறை ஆறங்கமாய் ஐந்து
புரியன் தேவர்கள் ஏத்த நஞ்சுண்டவன்
கரிய கண்டத்தினான் கடம்பந் துறை
உரியவாறு நினை மடநெஞ்சமே.

என திருநாவுக்கரசரால் தேவாரப்பாடல் பெற்ற காவிரி தென் கரைத்தலங்களில் இது 2 வது தலம் ஆகும். ஐயடிகள் இத்திருத்தல இறைவனை காடவர்கோன் என்று அழைக்கிறார். அருணகிரிநாதரால் திருப்புகழ் பாடப்பெற்ற தலங்களில் இதுவும் ஒன்று.

## பொது தகவல்

இங்குள்ள விநாயகர் அனுக்ஞை விநாயகர், இங்குள்ள விமானம் திரிதளம். ராஜகோபுரம் 5 நிலைகளைக் கொண்டது. சிவன் வடக்கு நோக்கி இருப்பதால், கோஷ்டத்தின் பின்புறத்தில் தெட்சிணாமூர்த்தி தெற்கு பார்த்தபடி இருக்கிறார். வழக்கமாக தெற்கு நோக்கி இருக்கும் சண்டிகேஸ்வரர் மேற்கு முகமாகவும், வடக்கு பார்த்திருக்கும் பிரம்மா கிழக்கு முகமாகவும் இருக்கின்றனர். பிரகாரத்தில் உள்ள நவக்கிரக சன்னதியின் மேலே முருகன், வள்ளி, தெய்வானையுடன் இருக்கிறார். செவ்வாய் தோஷத்தால் பாதிக்கப்பட்டவர்கள் செவ்வாய்க்கு அதிபதியான முருகனையும், நவக்கிரகத்தில் செவ்வாயையும் வழிபடுகின்றனர். அருகே சனீஸ்வரருக்கு தனிச் சன்னதி இருக்கிறது.

## பிரார்த்தனை

பெண்கள் இங்கு வேண்டிக்கொண்டால், அவர்களுக்கு சிவன் துணையாக இருந்து காப்பார் என்பது நம்பிக்கை. பொதுவாக பெண்கள் தங்களது அனைத்துக் குறைகளும் தீர இங்கு வேண்டிக்கொள்கிறார்கள்.திருமண தோஷம், செவ்வாய்

தோஷம், களத்திர தோஷம் உள்ளவர்கள் இத்திருத்தலத்தில் அருள்மிகு சந்திரசேகரருக்கும் அம்பாளுக்கும் திருக்கல்யாணம் செய்வித்தால் திருமணம் கைகூடும். இத்திருத்தலத்தில் தனி சந்நிதியாக அமையப்பெற்றுள்ள பரமநாதருக்கு வியாழக்கிழமை களில் தேன், சாத்துக்குடி அபிஷேகம் செய்து புது வஸ்திரம் சாற்றி பூஜைகள் செய்தால் பரமநாதர் உடனிருந்து காப்பாற்றுவார்.

## நேர்த்திக்கடன்

சுவாமி, அம்பாளுக்கு பிரார்த்தனை திருக்கல்யாணம் செய்து வைத்து தங்களது நேர்த்திக் கடன்கள் நிறைவேற்றிக் கொள்கின்றனர்.

## சிறப்பம்சம்

அதிசயத்தின் அடிப்படையில் : இங்குள்ள சிவன் வடக்கு நோக்கிய சுயம்பு லிங்கமாக இருப்பது சிறப்பாகும். கருவறையில் லிங்கத்திற்கு பின்புறத்தில் சப்த கன்னியர்கள் இருப்பது தனிச்சிறப்பு.

## திருவிழா

மாசியில் 13 நாட்கள் பிரம்மோற்ஸவம் நடைபெறுகிறது.

## உற்சவங்கள்

தைப்பூசம், வைகாசி விசாகம், கந்த சஷ்டி, பங்குனி உத்திரம் ஆகியன சிறப்பாக நடைபெறுகின்றன. தைப்பூச நட்சத்திரத்தில் காவிரியின் தென்கரையில் அமைந்துள்ள ஐந்து சிவத்தலங்கள் மற்றும் காவிரியின் வடகரையில் அமையப்பெற்ற மூன்று சிவத்தலங்கள் என்னும் அஷ்டமூர்த்திகள் ரிஷப வாகனத்தில் எழுந்தருளி சந்திப்பு தீபாராதனை நடைபெற்ற பிறகு திருகடம்பன்துறையில் அஷ்ட தேவர்கள் தீர்த்தவாரி மிகச்சிறப்பாக நடைபெறும்.

## திருவிழா

மாசி மாதம் திருத்தேர் திருவிழா நடைபெறும். ஆடிப்பெருக்கு மற்றும் ஆடி 28 ஆகிய நாட்களில் புதுமணத் தம்பதிகள் காவிரியில் நீராடி இத்திருத்தலத்தை வழிபடுவர். ஐப்பசி மாதத்தில் இறைவனுக்கு துலாஸ்நானம் நடைபெறும்.

### இதரச்சிறப்புகள்

இங்குள்ள சிவன் வடக்கு நோக்கிய சுயம்பு இலிங்கமாக இருப்பது சிறப்பாகும். கருவறையில் இலிங்கத்திற்கு பின்புறத்தில் சப்தகன்னியர்கள் இருப்பது தனி சிறப்பு. காலை கடம்பர், மதியம் சொக்கர், அந்தி திருவோங்கிநாதர், அர்த்தஜாமம் சிம்மபுரீஸ்வரர் தரிசிக்க வேண்டிய பெருமை உடைய தலமாக விளங்குகிறது. கங்கையின் தென்கரையில் வடக்கு நோக்கி காசி விஸ்வநாதர் எவ்வாறு அமைந்துள்ளாறோ அதேபோன்று காவிரியின் தென்கரையில் வடக்கு நோக்கி இத்திருத்தலம் அமையப் பெற்றுள்ளது. தக்ஷிணகாசி என்று அழைக்கப்படுகிறது. இத்திருத்தலத்தில் வழிபட்டால் காசியில் வழிபட்டதற்கு நிகரான பலன் கிட்டுகிறது.

### வரலாற்றுச் சிறப்பு

இத்திருத்தலம் மிக பழமையானதாகும். சுமார் 300 ஆண்டுகளுக்கு முன்பாக செட்டிநாட்டு மக்களால் கல்கார திருப்பணி மற்றும் 16 கால் மண்டப திருப்பணி மேற்கொள்ளப் பட்டுள்ளது.

சிற்பங்கள் அனைத்தும் மிக நேர்த்தியாக அமையப் பெற்றுள்ளது. முயலகன் இல்லாத நடராஜர் சிலையை இங்கே காணலாம். தன்னைத்தானே தனது கழுத்தில் போர் வாள் வைத்திருப்பது போன்ற சிற்பம் அமையப்பெற்றுள்ளது.

### நடை திறக்கும் நேரம்

காலை 6.00 மணி முதல் பகல் 1.00 மணி வரை
மாலை 4.30 மணி மு தல் இரவு 8.30 மணி வரை

### பூஜை காலங்கள்

இத்திருக்கோயிலில் தினமும் ஆறு காலை பூஜைகள் சிறப்பாக நடைபெறுகிறது.

| | |
|---|---|
| திருவனந்தாள் | காலை 6.00 to 7.00 மணி |
| காலைசந்தி | காலை 8.30 to 9.30 மணி |
| உச்சிக்காலம் | மதியம் 11.30 to 12.00 மணி |
| சாயரட்சை | மாலை 5.00 to 6.00 மணி |
| இரண்டாம் காலம் | மாலை 6.30 to 7.00 மணி |
| அர்த்தஜாமம் | இரவு 8.30 to 9.00 மணி |

### அமைவிடம்

திருச்சி, கரூர் தேசிய நெடுஞ்சாலையில் 35 கி.மீ. தொலைவில் குளித்தலையில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. திருச்சி - கோவை இரயில் மார்க்கத்தில் இரயில் நிலையத்திற்கு அருகில் உள்ளது.

### வழித்தடம்

திருச்சியிலிருந்தும், கரூரிலிருந்தும் பேருந்து மற்றும் புகைவண்டி வசதி உள்ளது.

**தொடர்பு முகவரி**

**செயல் அலுவலர்,**
அருள்மிகு கடம்பவனேஸ்வரர் திருக்கோயில்,
குளித்தலை - 639 104. கரூர் மாவட்டம்.
போன் : 91 4323 225228
இணையதளத்தொடர்பு : www.kadambartemple.tnhrce.in
மின்னஞ்சல் : kadambarkoil@gmail.com





# அருள்மிகு கல்யாண விகிர்தீசுவரசுவாமி திருக்கோயில்

## வெஞ்சமாங்கூடலூர், அரவக்குறிச்சி வட்டம், கரூர் மாவட்டம்.

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு கல்யாண விகிர்தீசுவர சுவாமி |
| இறைவி | அருள்மிகு பண்ணேர் மொழியம்மை (மதுர சுபாஷினி)<br>அருள்மிகு விகிர்த நாயகி, அருள்மிகு விகிர்தேசுவரி |
| தலவிருட்சம் | வில்வம் |
| பாடல் | சுந்தரர் - தேவாரம், அருணகிரிநாதர் - திருப்புகழ்<br>அப்பர் - க்ஷேத்திரக்கோவைத் திருத்தாண்டகம் |
| ஆகமம் | காமிக ஆகமம் |

### வெஞ்சமாங்கூடலூர்

இத்தலம், வெஞ்சமன் என்னும் வேட்டுவ மன்னன் ஆண்டதாலும், அமராவதியின் கிளை நதியான சிற்றாறு, அமராவதியுடன் கூடுமிடத்தில் (கூடல்) உள்ளதாலும் வெஞ்சமாங்கூடல் என்று பெயர் பெற்றது எனப்படுகிறது.

சாதம் இல்லாத உண்ணக்கூடிய மணப் பொருட்களுக்கு வெஞ்சனப்பொருள் என்று பெயர் உண்டு எனவும் அருகில் உள்ள மலையில் விளையும் வாசனை திரவியங்களும் ஆற்றின் வழி வந்து இறைவனின்

காலைத் தொட்டுத் தடவி கூடிச் செல்வதால் வெஞ்சனம் கூடும் ஊர் என்பதால் வெஞ்சமாங்கூடல் எனவும் பெயர் வந்துள்ளது. அதனையே சுந்தரர் தன் பாடல்களில் குறிப்பிடுகிறார் எனக்கூறப்படுகிறது.

விகிர்தன் என்றால் மேன்மை பெற்றவன். செய்யப்படாமல் தானே உருவானவன் எனப்பொருள்படும். சுயம்புவாய் உருவான இறைவன் எனவும், மங்கலத்தையும் நன்மையையும் தரவல்லவன் என்ற பொருளில் கல்யாண என்ற அடைமொழி சேர்த்து கல்யாண விகிர்தேசுவரர் எனவும் வழங்கப்படுகிறது.

## புராண வரலாறு

கவுதம முனிவரின் மனைவி அகலிகை. அவளது அழகில் மயங்கி பித்தன் ஆனான் இந்திரன். அவளை எப்படியாவது அடைந்து விடத் துடித்தான். ஒரு நாள் இந்திரனின் மாயச் செய்கையால் கவுதம முனிவர் வழக்கப்படியான பொழுதுக்கு முன்னரே தவறாக ஆற்றுக்குக் கிளம்பி தவ வேள்வி முடிக்கச் சென்றார். இந்திரனோ கவுதமரின் பர்ண சாலைக்குள் அவருருவில் நுழைந்து அகலிகையை பெண்டாளப் போனான்.

ஆற்றுக்குச் சென்ற கவுதமர் அனைத்தையும் மனக்கண்ணால் கண்டு உணர்ந்து வெறும் காமவயத்தால் தவறு செய்த இந்திரன் உடல் முழுவதும் குறிக்கண் பெறவும், கூடலில் அமர்ந்து அருள் செய்யும் இறைவனை குறிப்பிட்டக் கால அளவுக்குப் பிறகு துதித்து சாபவிமோசனம் பெறவும், தன்னிலை மறந்து இருந்த தவறுக்காக அகலிகை கல்லாகக் கடவாள் எனவும், ராமன் பாதம் பட்டு விமோசனம் பெறுவாள் எனவும் தண்டனையும், விமோசனமும் இருவருக்கும் அருளினார்.

அதன்படி இந்திரன் குறிக்கண்களோடு நெடு நாள் அலைந்து திரிந்து பலர் கூடும் அவைகளுக்குச் செல்லாமல், வெட்கி, தலைகுனிந்து, மறைந்து காட்டிலும் மலைகளிலும் அலைந்து, இறுதியாக அருகிலுள்ள மலையில் இருந்து வரும் குடகனாறும் அமராவதியும் கூடும் துறையில் சுயம்புவாய் தானாய் உருவாகி அருள் வழங்கிக் கொண்டு இருக்கும் நீரில் பூத்த நெருப்பான சிவனைக் கண்டு வணங்கி தன் சாபம் தீர்ந்தான் என்பது இத்தலத்தின் வரலாறு ஆகும்.

### கோவிலின் அமைப்பும் சிறப்பும்

ஐந்து நிலை இராஜகோபுரம் இத்திருக்கோவிலுக்கு அணி செய்கிறது. அதனைத் தாண்டி படிக்கட்டுகளில் இறங்கினால் துவஜஸ்தம்பம், அதனை அடுத்து மகாமண்டபம், அறுபத்து மூவர் சன்னதி, விநாயர் சன்னதி, பஞ்சலிங்கங்கள், ஆறுமுகப்பெருமான், சண்டிகேஸ்வரர், நடராஜர், பைரவர், நவகிரகங்கள் ஆகியவை களும் கிழக்கு முகமாக சுவாமி கல்யாண விகிர்தீஸ்வரரும் தனி சன்னதியாக அம்மன் மதுரசுபாஷினி நின்ற கோலத்திலும் காட்சியளிக்கிறார்கள்.

மேலும் கருவறைக்குப்பின் அர்த்தநாரீஸ்வரர் இருக்கு மிடத்தில் இலிங்கோத்பவர் உள்ளார். பண்டைய காலத்துள் விண்ணுயர்ந்த ராஜகோபுரத்துடனும், ஊர் கூடி நடத்தும் திருவிழாக்களும் அதிகம் நடந்ததாகவும் சுந்தரர் தேவாரத்துள் கூறுகின்றார்.

### திருப்பணியும் திருக்குடமுழுக்கும்

குடகனாற்றில் 1977-ல் ஏற்பட்ட பெரு வெள்ளத்தின் காரணமாக கோவில் முற்றிலும் தரைமட்டமானது. இதன்பின் திருக்கோவிலுக்கு 26.02.1985 ல் திருக்குடமுழுக்கும் 07.09.2003-ல் திருப்பணிகள் முடித்து திருக்குடமுழுக்கும் நடைபெற்றது.

### கல்வெட்டுச் செய்திகள்

கி.பி.985 முதல் கி.பி.1013 வரை பல கல்வெட்டுகள் உள்ளன. அவை சுவாமி, அம்பாள் கருவறைச் சுவர்களிலும், முன்மண்டபச்சுவர்கள் தூண்களிலும், திருமாளிகைப் பத்தியின் தென்வடசுவர்களிலும் காணப்படுகின்றன. அவைகளில் இராஜகேசரி, ஜயகேசரி என்ற சொற்கள் தனியே பொறிக்கப் பெற்றுள்ளன. இவை கோனேரின்மை கொண்டான், ஜடாவர்மன் சுந்தரபாண்டியதேவன், பாண்டியன் மாறவர்மன், குலசேகரதேவன், வீரராஜேந்திரன், வீரபாண்டியன் என்னும் மன்னர்கள் காலத்தில் ஏற்பட்டவை. பல ஊர்கள் இக்கோயிலுக்கு இறையிலித் தேவதானமாக விடப்பட்டுள்ளது. கோயிலில் பூஜை முதலியன நிகழ்வதற்காகப் பல மானியங்கள் அளித்ததும், விளக்கெரிக்கப் பொன் வழங்கியதும், சுந்தரபாண்டியதேவன் பண்ணேர் மொழியம்மை கோயிலில் சில திருப்பணிகள் செய்ததும் ஆகிய செய்திகள் இக்கல்வெட்டுக்களாற் புலனாகின்றன.

## இலக்கியச்சிறப்பு

திருநாவுக்கரசு சுவாமிகள் க்ஷேத்திரக்கோவைத் திருத்தாண்டகத்தில் பாடியுள்ளார். நம்பியாரூரர் கொங்கு நாட்டில் காஞ்சி எனும் ஆற்றின் கரையில் உள்ள பேரூரில் திருக்கோயிலை வலம் வந்து திருமுன் சென்றபொழுது பெருமான் தில்லையில் நடனம் செய்யும் திருக்கோலத்தைக் காட்டக் கண்டு தொழுது நீங்கி, அருளால் மலை, காடு, நதி இவற்றைக் கடந்து பல பதிகளையும் வணங்கித் திருவெஞ்சமாங்கூடற்பெருமானைத் தொழுது பாடியருளியது இத்திருப்பதிகம். தேவாரத்தில்

எறிக்கும் கதிர்வேய் உதிர் முத்தமோ டு
ஏலம், இலவங்கம், தக்கோலம், இஞ்சி,
செறிக்கும் புனலுட் பெய்து கொண்டு மண்டித்
திளைத்து ஏற்று சிற்றாறதன் கீழ்க்கரைமேல்
முறிக்கும் தழை மா மூடப்புன்னை ஞாழல்
குருக்கத்திகள் மேல் குயில் கூவலறா
வெறிக்குங் கலைமா வெஞ்சமாக்கூடல்
விகிர்தா அடியேனையும் வேண்டுதியே!

என சுந்தரமூர்த்தி நாயனாரும்

## திருப்புகழில்

வண்டுபோல் சாரத் தருள்தேடி
மந்திபோற் காலப் பிணிச்சாடிச்
செண்டு போற் பாசத்துடன் ஆடிச்
சிந்தைமாய் உபதேசித்து அருள்வாயே
தொண்டராற் காணப்பெறுவோனே
துங்கவேற் காணத் துறைவோனே
மிண்டரால் காணக் கிடையானே
வெஞ்சமாக்கூடர் பெருமானே

என அருணகிரிநாதரும் பாடியுள்ளார்

## உற்சவங்கள்

இத்திருக்கோயிலில் ஸ்ரீ விநாயகர் சதுர்த்தி, நவராத்திரி, ஐப்பசி அன்னாபிஷேகம், திருக்கார்த்திகை தீபம், மஹாசிவராத்திரி, நடராஜர் அபிஷேகங்கள் போன்ற உற்சவங்கள் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

### திருவிழா

மாசிமாதம் பத்து நாட்கள் நடைபெறும் மாசித் திருத்தேரோட்டம் சிறப்பான முறையில் நடைபெற்று வருகிறது.

### நடைதிறக்கும் நேரம்

காலை 6.00 மணிமுதல் பகல் 12.30 முடிய

மாலை 4.00 மணி முதல் இரவு 8.00 முடிய

### பூஜைக்காலம்

தினமும் இரண்டு காலை பூஜைகள் நடைபெற்று வருகிறது.

| | |
|---|---|
| காலை சந்தி | காலை 8.00 மணி |
| சாயரட்சை | மாலை 5.30 மணி |

### அமைவிடம்

கரூர் நெடுஞ்சாலையில்16 கி.மீ சென்று பின் தென்திசையாக 10 கி.மீ. தொலைவில் சிற்றாறும், குடகனாறு கூடும் இடத்தில் இத்திருக்கோவில் அமைந்துள்ளது.

### வழித்தடம்

கரூர் ஆத்துமேடு நகரப்பேருந்தும், கரூர் திண்டுக்கல் செல்லும் இரு பேருந்துகளும் வெஞ்சமாங்கூடலூர் வழியாக செல்கின்றன.

### தொடர்புமுகவரி

செயல் அலுவலர்

அருள்மிகு கல்யாணபசுபதீஸ்வரசுவாமி திருக்கோயில்,

கரூர் நகரம்.

தொலைபேசி எண் : 04324 - 262010

மின்னஞ்சல் முகவரி : **karurpasupathykoil@gmail.com**

வலைத்தளமுகவரி : **karurpasupatheeswarar.tnhrce.in**

### பஞ்ச வில்வங்கள்

வில்வம்

கிளுவை

மாவிலங்கை

விளா

நொச்சி



# அருள்மிகு மாரியம்மன் திருக்கோயில்

## தேர் வீதி, கரூர் நகரம்.

| | |
|---|---|
| இறைவி | அருள்மிகு மாரியம்மன் (மகாமாரி) |
| பழமை | 150 வருடங்கள் |
| புராணப்பெயர் | ஆதிகருவூர். |

### தல வரலாறு

கிராமத்தில் உள்ள ஸ்ரீ மாரியம்மன் கோயிலில் இருந்து பிடிமண் எடுத்து வந்து இத்திருக்கோயிலில் பரம்பரை அறங்காவலரின் முன்னோர்களால் தற்சமயம் உள்ள இடத்தில் ஸ்தாபிக்கப்பட்டது. இது சிறந்த பிரார்த்தனை தலமாக விளங்குகிறது. வைகாசிப் பெருந்திருவிழாவின் போது நடக்கும், கம்பம் விடும் விழா மிகவும் சிறப்பானது.

### சிறப்பம்சம்

அருள்மிகு மாரியம்மன் நான்கு கரங்களுடன் கிழக்கு முகமாக சற்றே ஈசான்ய பார்வையுடன் அமர்ந்த நிலையில் அருள்பாலித்து வருகிறாள். இக்கோயிலில் விஷேச அபிஷேக ஆராதனையுடன் கம்பத்துக்கு தயிர் சாதம் படைத்து அம்மனை வழிபட்டு தங்களுடைய பிரார்த்தனைகளை நிறைவேற்றுகின்றனர்.

### தலப் பெருமை

மனிதன் தோன்றுவது அன்னையின் வயிற்றில், மறைவது பூமித்தாயின் வயிற்றில், எப்படித் தோன்றுகிறோமோ அதிலேயே மறைவோம் என்பதே இதில் அடங்கியுள்ள தத்துவம். இதன் உண்மை வடிவமே மாரியம்மன். அந்த வகையில் இந்த ஆலயத்தில் அம்மன் பிரசாதமாக வழங்கப்படுவது திருமண் மட்டுமே.

மஞ்சள் நீர் கம்பம் உற்சவத்தின் போது வேப்பமரத்தின் மூன்று கிளைகளை உடைய ஒரு பகுதியை எடுத்து வந்து, அதில் இருக்கும் பட்டைகளை உரித்து வடிவமைத்து, மஞ்சள் பூசப்பட்டு, ஆற்றிலிருந்து பூஜை செய்து எடுத்து வரப்பட்டு, ஆலயத்தின் பலிபீடத்தின் அருகில் கம்பம் நடப்படும். இதை சுவாமியாகக் கருதுகிறார்கள். இதை மஞ்சள் நீர்க் கம்பம் என்று அழைக்கிறார்கள்.

### பொது தகவல்

இந்துக்கள் மட்டுமின்றி அனைத்து மதத்தினரும் வந்து வழிபடும் ஆலயம். பெண்களின் வருகையும் வழிபாடும் மிக அதிகம். பால் குடம் எடுத்தல் மிகப் பிரபலம்.

### பிரார்த்தனை

அம்மை முதலான நோய்கள் மற்றும் உடல் உபாதைகள், வழக்கு சிக்கல்கள், காணாமற் போன பொருட்கள், வியாபார சிக்கல் முதலியவற்றுக்கு இங்குள்ள அம்மனை வழிபட்டால் தீர்வு கிடைக்கிறது.

### நேர்த்திக்கடன்

அக்னி சட்டி ஏந்துதல், அலகு குத்துதல், காவடி எடுத்தல், பால் குடம், மாவிளக்கு வைத்தல், பொங்கல் வைத்தல் ஆகியவை. இவை தவிர நீர்மோர், பானகம், வடை பருப்பு வைத்தும் பிரார்த்தனை செய்கிறார்கள்.

### உற்சவங்கள்

ஆடி வெள்ளி, நவராத்திரி, தீபாவளி, பெரிய கார்த்திகை, பொங்கல், தை வெள்ளி, பங்குனி மாதத்தில் நடக்கும் கும்பாபிஷேக ஆண்டு விழா

## திருவிழா

கரூர் திருவிழாக்களில் வைகாசி மாதம் நடைபெறும் மாரியம்மன் திருவிழா மிகவும் புகழ் பெற்றது. சித்திரை கடைசி ஞாயிற்றுக் கிழமையில் அதைத் தொடர்ந்து வரும் வெள்ளிக்கிழமை பூச்சொரிதல் விழாவும், தொடர்ந்து வரும் ஞாயிற்றுக்கிழமை காப்பு கட்டுதலும், அதனையடுத்து வரும் ஞாயிறு மறுகாப்பும், திங்கள், செவ்வாய் பால்குடம் அக்கினிச் சட்டி ஏந்துதல், மாவிளக்கு, அலகு குத்துதல் நிகழ்ச்சியும், புதன்கிழமை கம்பம் அமராவதி ஆற்றில் கம்பம் விடும் நிகழ்ச்சியும் இத்திருவிழாவில் முக்கிய நிகழ்ச்சியாகும்.

## நடை திறக்கும் நேரம் :

காலை 6.00 மணிமுதல் இரவு 8.30 மணி வரை நடை திறந்திருக்கும்

## பூஜை நேரம் :

தினமும் நான்கு கால பூஜைகள் நடைபெற்று வருகிறது.

| | |
|---|---|
| காலைசந்தி | காலை 7.30 to 7.45 மணிக்குள் |
| உச்சிக்காலம் | பகல் 11.00 to 11.45 மணிக்குள் |
| சாயரட்சை | மாலை 5.15 to 5.30 மணிக்குள் |
| அர்த்தஜாமம் | இரவு 8.30 மணி |

சிறப்பு நாட்களில் நேரங்கள் மாறுதலுக்கு உட்பட்டது.

## அமைவிடம்

இத்திருக்கோயில் கரூர் நகரின் மையப்பகுதியில் தேர்வீதியில் அமைந்துள்ளது.

## வழித்தடம்

கரூர் இரயில் சந்திப்பிலிருந்தும், பேருந்து நிலையத்திலிருந்தும் தானியங்கி வசதிகள் உள்ளன.

### தொடர்பு முகவரி

பரம்பரை அறங்காவலர்,
அருள்மிகு மாரியம்மன் திருக்கோயில்,
கரூர் – 639 001. கரூர் மாவட்டம்.
போன் : +91 4324 246146



# அருள்மிகு அபயபிரதான ரெங்கநாதசுவாமி திருக்கோயில்

## மேட்டுத் தெரு, கரூர் நகரம்.

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு அபயபிரதான ரெங்கநாதசுவாமி |
| இறைவி | அருள்மிகு ரெங்கநாயகி தாயார் |
| தல விருட்சம் | உறங்கா இலந்தை |
| ஆகமம் | வைகானஸம் |

### தல சிறப்பு

கருவறை கிழக்கு நோக்கி உள்ளது. மூலவர் சுதை சிற்பம், பள்ளி கொண்ட ரெங்கநாதராக ஆதிசேஷன் மீது கிடந்தும், உந்தி தாமரையில் பிரம்மாவுடனும், வலது கரம் மார்கண்டேய மகரிஷிக்கு அபயமளிக்கும் நிலையிலும் அமைந்துள்ளது. அர்த்த மண்டபம், மகா மண்டபம், முன்புறம் துவார பாலகர்களும் சுவாமிக்கு வலது புறத்தில் தாயார் சன்னதியும், பின்புறம் இடது புறத்தில் ஆண்டாள் சன்னதியும், அதனருகில் புராதன ரெங்கநாதர் மற்றும் ஆஞ்சநேயர் சன்னதியும் உள்ளது. நுழைவு வாயிலுக்கு வெளியில் சுவாமிக்கு நேர் எதிரே கருடாழ்வார் சன்னதியும் அதற்கு பின் கொடி மரமும், கம்பத்தடி தூணும் உள்ளது.

### தனிச்சிறப்பு

மார்க்கண்டேய மகரிஷிக்கு அபயம் அளித்த பெருமாள் என்ற சிறப்பு, உறங்கா இலந்தை எனும் ஆண்டு முழுவதும் கனி தரக்கூடிய இலந்தை மரம் தல விருட்சமாக உள்ளது.

### திருவிழாக்கள் - உற்சவங்கள்

சித்திரை மாதம் திருத்தேர்த்திருவிழாவும், தமிழ் மற்றும் தெலுங்கு வருட பிறப்பு, ஆனிமாதம் கேட்டை நட்சத்திரம் அன்று தைலக் காப்பு உற்சவமும், நவராத்திரி விழா, மார்கழி மாதத்தில் பகல் பத்து இராப்பத்து எனும் ஸ்ரீவைகுண்ட ஏகாதசி உற்சவம், தைமாதம் ரதசப்தமி புறப்பாடும் நடைபெற்று வருகிறது.

### நடை திறப்பு நேரம்

காலை 7.00 மணி முதல் பகல் 11 .30 மணி வரை

மாலை 5.00 மணி முதல் இரவு 8.30 மணி வரை

### பூஜை நேரம்

தினசரி நான்குகால பூஜைகள் நடைபெற்று வருகிறது.

| | | |
|---|---|---|
| காலை சந்தி | காலை | 7.00 மணி |
| உச்சிக்காலம் | பகல் | 11.00 மணி |
| சாயரட்சை | மாலை | 5.00 மணி |
| அர்த்தஜாமம் | இரவு | 8.00 மணி |

### அமைவிடம்

கரூர் நகரத்தில் மேட்டு தெருவில் உள்ளது.

### வழித்தடம்

கரூர் பேருந்து நிலையத்திலிருந்தும், புகைவண்டி நிலையத்திலிருந்தும் தானியங்கி (ஆட்டோ) வசதி உள்ளது

### தொடர்பு முகவரி

உதவி ஆணையர் / செயல் அலுவலர்
அருள்மிகு கல்யாண வெங்கடரமண சுவாமி திருக்கோயில்,
தாந்தோன்றிமலை. தொலைபேசி எண் : 04324 - 257531
இணையதளத்தொடர்பு : www.thanthoniperumal.tnhrce.in
மின்னஞ்சல் : thanthonriperumal@tnhrce.org



# அருள்மிகு வஞ்சுலேசுவரசுவாமி திருக்கோயில்

## கரூர் நகரம், கரூர் வட்டம் (ம) மாவட்டம்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு வஞ்சுலேசுவரர் |
| இறைவி | அருள்மிகு விசாலாட்சி |
| தலவிருட்சம் | வில்வம் |
| தீர்த்தம் | பிரம்மதீர்த்தம் |
| ஆகமம் | காரண ஆகமம், காமிக ஆகமம் |

**புராண வரலாறு**

ஆதியில் பிரம்மதேவன் படைப்புத் தொழில் செய்து வந்த போது, ஓர் வினாடி துயில் கொள்ள, படைப்புத் தொழில் நின்று போனது. அவன் வேண்டுகோளுக்குஇணங்க சிவபெருமான் பிரமனை பார்த்து கருவூர் எனும் திருத்தலத்தில் எம்மை பூஜித்து வர உமக்கு படைப்புத் தொழில் ஆற்றலை அருளுவோம் என்றார். அதன்படி பிரமன் கருவூர் வந்து தன் பெயரில் பிரம்ம தீர்த்தத்தையும், திருக்கோவிலையும் அமைத்து, வஞ்சுலேசுவரரையும், பஞ்சலிங்கங்களையும் வழிபட்டு படைப்பு தொழில் ஆற்றலை பெற்றான்.பிரம்மன் கரு உற்பத்தி செய்த ஊர் ஆதலால் கரு + ஊர் = கருவூர் என்றும், கரூர் என்றும் வழங்கப்படுகிறது.

வஞ்சிக் கொடிகள் சூழ்ந்த வனத்தில் இவ்வாலயம் பிரம்மதேவரால் அமைக்கப்பட்டதால் வஞ்சுளாரண்யம் எனவும் வழங்கப்பட்டது.

### கோவிலின் அமைப்பு

கிழக்கு நோக்கிய சாளக்கார கோபுரம் அணி செய்கிறது. இங்கு வஞ்சுலீசுவரர் கிழக்கு நோக்கி காட்சி தருகிறார். மூலவரின் இருபுறமும் முறையே ஸ்தபன விநாயகரும், பாலதண்டாயுத பாணியும் அணி செய்கின்றனர். தெற்கு திசை நோக்கி அம்பிகை விசாலாட்சி அம்மையார் சன்னதி உள்ளது. அம்மன் சன்னதி அருகேயே உற்சவரான நடராஜ பெருமானையும் தரிசிக்கலாம். பிரகாரத்தில் நால்வர். கன்னி மூலையில் ஸ்ரீ விநாயகரும், அருகில் கஜலட்சுமியும், வடமேற்கு மூலையில் வள்ளி தெய்வானை உடனாகிய முருகப்பெருமானும் அருள்பாலிக்கின்றனர் காலபைரவரும், நவக்கிரகங்களும் ஈசான்ய மூலையில் எழுந்தருளி உள்ளனர்.

### தீர்த்தம்

பிரம்ம தேவரால் உருவாக்கப்பட்ட பிரம்ம தீர்த்தம் உள்ளது. அதன் பெயரால் இன்றும் அவ்வீதி பிரம்ம தீர்த்த சாலை என வழங்கப்பட்டு வருகிறது. இந்தத் தீர்த்தத்தில் நீராடி தினந்தோறும் அதிகாலையில் வஞ்சுலேசுவரரையும், பசுபதீசுவரரையும் வெண்ணைமலையையும் வலம் வந்து எட்டு தினங்கள் வணங்குவோர், தொழு நோய், நரம்புத்தளர்ச்சி, ரத்த அழுத்தம் போன்ற நோய்கள் நீங்கப் பெறுவர் என்பது அகத்திய முனிவரின் வாக்கு ஆகும்.

### இலக்கியச் சிறப்பு

கரூர் சோழ மன்னர்களின் தலைநகராய் விளங்கிய பெருமையை உடையது. பண்டைய காலத்தில் வெளிநாடுகளுக்கு வாணிபத் தொடர்பு கொண்டிருந்த மூவூர்களில் கரூர், மதுரை, உறையூர் ஆகியவற்றில் மூத்த ஊராக கரூர் திகழ்ந்துள்ளது.

"திருமாவியனகர் கருவூர்" என அகநானூறும்

"மன்னிய அநபாயன் சீர்மரபின் மாநகரமாம்

தென்னெடுங்கருவூர் என்னும் சுடர்மணி வீதி மூதூர்"

என சேக்கிழாரால் பெரியபுராணத்திலும் பாடப்பெற்ற பெருமைக்குரிய நகரமாகும்.

### திருப்பணியும் திருக்குடமுழுக்கும்

மிகவும் பழுதடைந்த இக்கோயில் கருவூர் பொதுமக்கள் பொருளுதவியால் திருப்பணிகள் செய்யப்பட்டு 07.05.2000ல் திருக்குட நீராட்டுப் பெருவிழா நடைபெற்றது.

## உற்சவங்கள்

பிரதோஷம், கிருத்திகை, சதுர்த்தி, சஷ்டி, நடராஜர் அபிஷேகங்கள், தனுர் மாத பூஜை, ஐப்பசி அன்னாபிஷேகம், நவராத்திரி, கார்த்திகை தீபம் முதலான முக்கிய நாட்களில் விசேஷ பூஜைகள் நடைபெறுகின்றன.

## நடை திறக்கும் நேரம்

காலை 7.30 மணிமுதல் 10.30 மணிவரை

மாலை 5.00 மணிமுதல் 7.30 மணிவரை

## பூஜை நேரம்

திருக்கோயிலில் தினமும் ஒரு கால பூஜை நடைபெற்று வருகிறது.

| | |
|---|---|
| காலை சந்தி | காலை 8.00 மணி |

## அமைவிடம்

கரூர் நகரமையப்பகுதியில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

## வழித்தடம்

கரூர் நகரில் பேருந்து நிலையம் அருகில் உள்ளது. திருச்சி, திண்டுக்கல், ஈரோடு ரயில் மார்க்கம் மற்றும் பேருந்து வசதிகள் உள்ளன.

### தொடர்பு முகவரி


செயல் அலுவலர்

அ/மி கல்யாணபசுபதீசுவரசுவாமி திருக்கோயில்,

கரூர் நகரம், கரூர் வட்டம் (ம) மாவட்டம்

தொலைபேசி எண் : 04324 - 262010

மின்னஞ்சல் முகவரி - karurpasupathykoil@gmail.com

வலைதளமுகவரி - www.karurpasupatheeswarar.tnhrce.in



# அருள்மிகு பாலசுப்ரமணியசுவாமி திருக்கோயில்

## வெண்ணெய்மலை, கரூர் மாவட்டம்.

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு பாலசுப்ரமணியசுவாமி |
| தல விருட்சம் | அரசமரம் |
| தீர்த்தம் | தேனு தீர்த்தம் |
| வழிபட்டோர் | பிரம்மன், காமதேனு, தாடகை, முசுகுந்தன் பகவன், கருவூர்த்தேவர். |

### தல வரலாறு

கரூர் மாவட்டம், வெண்ணெய்மலையில் அமைந்துள்ளது அருள்மிகு பாலசுப்பிரமணியர் கோயில் ஆகும். சுமார் 2 ஆயிரம் வருடங்கள் பழமை வாய்ந்த இந்த கோயிலின் மூலவர் பாலசுப்பிரமணியர். யோகி பகவான் என்பவர் இந்த மலையில் தியானத்தில் இருக்கும்போது அவருக்கு முருகன், பாலசுப்பிரமணியர் அவதாரத்தில் காட்சி தந்து தமது அருள் வெண்ணெய்மலையில் உள்ளதாகவும், அதனை அனைவரும் அறியும்படி செய்யுமாறும் கட்டளையிட்டார். முருகனின் அருட்கோலம் தரிசித்த யோகிபகவான் இது குறித்து கருவூர் அரசனிடம் கூறினார். மன்னரும் மரத்தடியில் உயர்ந்த கோபுரம், மண்டபம் அமைத்து முருகன் சிலையை பிரதிஷ்டை செய்து கோயில் எழுப்பினார். சன்னதிக்கு தென்புறத்தில் காசி விஸ்வநாதரையும், விசாலாட்சியையும் பிரதிஷ்டை செய்தார். முருகன் சன்னதிக்கு வடபுறத்தில் முருகனின் யந்திரம் அமைத்தார்.

## தல புராணம்

முன்னொரு யுகத்தில் பிரம்ம தேவனுக்கு தனது படைப்பு தொழிலில் கர்வம் தோன்றியது. அவருக்கு பாடம் புகட்ட ஈசன் எண்ணினார். ஒரு சமயத்தில் பிரம்மனால் படைக்கும் தொழிலை மேற்கொள்ள இயலாமல் போனது. பிழையை உணர்ந்த பிரம்மன், தனது பிழையை பொறுக்குமாறு ஈசனிடம் வேண்டினார். அதற்கு தீர்வாக வஞ்சி வனத்தில் தவம் இயற்றுமாறு ஈசன் கூறினார். இந்த நிலையில் படைக்கும் தொழிலை தேவலோக பசுவான காமதேனுவிடம் ஒப்படைத்தார்.

தன்னால் படைக்கப்பட்ட உயிரினங்கள் பசியில்லாமல் வாழ்வதற்காக வெண்ணெய்யை மலையென குவித்து அதன் அருகிலேயே தேனு தீர்த்தம் எனும் பொய்கையையும் உருவாக்கினார். இதனால்தான் இன்றும் வெண்ணெய்மலை பாறை கடும் வெயிலிலும் குளுமையுடன் திகழ்கிறது.

இத்தலத்தில் பிரம்மன், காமதேனு, தாடகை, முசுகுந்தன், கருவூரார், யோகி பகவன் முதலானோர் வழிபட்டு பேறு பெற்றார்கள். இக்கோயிலின் வரலாறு ஸ்கந்த புராணம், பவுஸ்ய புராணங்களில் கூறப்பட்டுள்ளது. சேர மன்னர்களாலும், சோழ மன்னர்களாலும் இக்கோயில் திருப்பணி செய்யப் பெற்றுள்ளது என்று திருக்கோவில் கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன.

## தலச்சிறப்பு

மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய மூன்றினாலும் சிறப்பு பெற்ற இத்திருத்தலத்திற்கு வந்து பாலசுப்பிரமணியரை பணிந்தால் வளமான வாழ்க்கை அமைகிறது என்பது பக்தர்களின் நம்பிக்கை. மலையின் அடிவாரத்தில் காமதேனுவால் அமைக்கப்பட்ட தேனு தீர்த்தத்தில் ஐந்து தினங்கள் நீராடி முருகனை வழிபட்டால் பிள்ளையில்லா குறை தீர்வதுடன், தோஷங்களும் நீங்குகிறது.

இக்கோயிலுக்கு வந்து சுவாமி மற்றும் அம்பாளுக்கு அபிஷேகம் செய்து வஸ்திரம் அணிவித்து நேர்த்திகடன் நிறைவேற்றலாம்.

தஞ்சை அருள்மிகு பிரகதீசுவரர் கோயில், கரூர் அருள்மிகு கல்யாண பசுபதீசுவரர் கோவில், வெண்ணெய்மலை அருள்மிகு முருகன் கோயில் ஆகிய கோயில்களில் மட்டுமே சித்தர் கருவூராருக்கு தனி சன்னதிகள் அமைந்து உள்ளன.

புகழ்ச்சோழர் காலத்தில் ஒரு சிறிய கோயிலாக மலை அடிவாரத்தில் இருந்து முழுமையும் சிதைந்து சீர்கேடான நிலையில், நாட்டுக்கோட்டை நகரத்தார் மரபில் வந்த முத்துக் கருப்பன் செட்டியார் கருவூரில் வாணிபம் செய்ய வந்தபொழுது கார்த்திகை வழிபாடு செய்ய இங்கு வந்தார். சிறப்புகள் வாய்ந்த வெண்ணெய்மலை முருகன் கோயில் சீரழிந்துள்ளதே என்று வருந்தினார். அந்த சமயத்தில் செட்டியாருக்கு முருகன் கனவில் தோன்றி முழுமையும் கருங்கல் திருப்பணியாகச் செய்வீராக என அருள் செய்தார். அவ்வண்ணமே அவரும் கருங்கல் திருப்பணி செய்து 01.07.1923 அன்று திருக்குடமுழுக்கும் செய்வித்தார்கள்.

## பெயர்க்காரணம்

தன்னால் படைக்கப்பட்ட உயிரினங்கள், பசிப்பிணி அற்று வாழ்வதற்காக வேண்டி, காமதேனு, வஞ்சி வனத்திற்கு வடக்குத் திசையில் சிவபெருமானின் அருளினால் வெண்ணெய்யை அதிகமாக உண்டாக்கி வெள்ளிமலையெனக் குவித்ததுடன், அதன்கீழ் தன் பெயரால் தேனு தீர்த்தம் என்னும் பொய்கையையும் உண்டாக்கி, தன்னால் படைக்கப்பட்ட உயிர்களின் பசியும் தாகமும் தீர்த்து வந்தது.

இந்நிலையில் வஞ்சி வனத்தில் தவம் புரிந்து பிரம்மாவும், விஷ்ணுவும் ஈசனின் அருளால் படைக்கவும், காக்கவும் திறனைப் பெற்றனர்.இதனால் காமதேனு ஈசனை எண்ணி தவம் செய்தது. இதனைக் கண்ட சிவபெருமான் அதற்குக் காட்சிதந்து, வேண்டும் வரம் யாதெனக் கேட்டார். காமதேனு, ஐயனே, நின் அருளால் நான் இங்குள்ள உயிர்களுக்கு வெண்ணெய்யை நல்ல உணவாக அளித்து வந்தேன். அதை எக்காலத்தும் யாவரும் அறியும் வண்ணம் இவ்விடத்தில் ஒரு வெண்ணெய்மலை உண்டாக வேண்டும். மேலும் அதைத் தரிசித்தவர்களின் பாவங்களெல்லாம் போக்க அருள்புரிய வேண்டுமென்றது. அதன்படியே சிவபெருமான் அருள் புரிய, அங்கே வெண்ணெய்மலை தோன்றியது.

வஞ்சிவனத்தில் அனைத்து தேவர்களாலும் வழிபடப்பெற்ற சிவபெருமானைத் தானும் வழிபட எண்ணிய முருகப்பெருமான் வஞ்சிவனத்தை அடைந்து, கருவூர்த்தலத்தின் கீழ்த்திசையில் அமராவதி நதிக்கரையில் ஒரு தீர்த்தம் உண்டாக்கி பக்தியுடன் பரமனைப் பூஜிக்க, முருகனுக்குத் திருக்காட்சி அருளிய

ஈசன், “முருகா! நீ, காமதேனுவால் தோற்றுவிக்கப்பட்டதும், தரிசிப்பவர்களுக்குச் சகலபேறுகளையும் அளிக்க வல்லதுமான வெண்ணெய்மலையில் பாலசுப்பிரமணியனாக வீற்றிருந்து, உன்னைத் தரிசிப்பவர்க்கெல்லாம் அவர்கள் கேட்கும் வரங்களை கேட்டபடி அருள்வாயாக ” என்றார்.

கருவூர் ஐயனின் அருளினால், வெண்ணெய்மலை பாலசுப்பிரமணியன் அருள்புரியும் அற்புதத் திருத்தலம் ஆயிற்று.

கருவூரில் தவமியற்றி, ஈசனருளால் படைக்கும் திறனைப் பெற்ற பிரம்மதேவன், ஈசனின் ஆணைக்குக் கட்டுப்பட்டு, வெண்ணெய்மலை சென்றடைந்து சரசுவதி தேவியுடன் சிவபெருமானைக் குறித்து யாகம் ஒன்று செய்ய, யாகத்தின் முடிவில் பிரம்மாவிற்குக் காட்சிதந்த சிவபெருமானிடம் “ஐயனே யோகத்தினாலும் அடைவதற்கரியனான நீ, நான் செய்த யாகத்தினாலும் எனக்கு அருள்புரிய வேண்டும். மேலும் இத்திருத்தலத்திற்கு வந்து, பாலசுப்பிரமணியரை வழிபட்டு, ஒன்றுக்குப் பத்தாக பெருகிட நீ அருள்புரிய வேண்டும்” என்றார். ஈசனும் அப்படியே அருள்புரிந்து மறைந்தார்.

பின்னர் பிரம்மா வெண்ணெய்மலையில் அருளும் பாலசுப்பிரமணியரைப் பணிந்து வணங்கித் தன் படைப்புத் தொழிலைத் தொடர்ந்தார்.

## இலக்கியச்சிறப்பு

அட்டதிசை பரவும் ஆநிலைப் பசுபதியார்
பட்டிக் கடங்காப் பசுபடைத்தா ரம்மானை
பட்டிக் கடங்காப் பசுபடைத்தா ராமாயின்
கட்டிக் கறந்து கடைவதெவ்வா றம்மானை
கடைந்தல்லோ வெண்ணெய்மலை
கண்டதுகா ணம்மானை.

என ஒளவையார் மூவரம்மானையில் பாடியுள்ளார்.

## உற்சவங்கள்

மாத கிருத்திகை, ஆடி கிருத்திகை, கந்த சஷ்டி, சூரசம்ஹாரம், கார்திகை தீபம், பங்குனி உத்திரம் சிறப்பாக கொண்டாடப்படுகிறது.

## திருவிழா

தைப்பூச பிரம்மோற்சவம் 10 நாள் திருவிழாவில் திருத்தேர் திருவிழா நடைபெறுகிறது.

### நடை திறந்திருக்கும் நேரம்

காலை 7.30 மணி முதல் 12. 30 மணி வரை

மாலை 5.00 மணி முதல் 8.00 மணி வரை

### பூஜை காலங்கள்

இத்திருக்கோயிலில் நான்கு கால பூஜைகள் நடைபெற்று வருகிறது.

| | | |
|---|---|---|
| காலை சந்தி | - | 9.00 மணி |
| உச்சிக்காலம் | - | 12.00 மணி |
| சாயரட்சை | - | 6.00 மணி |
| அர்த்தஜாமம் | - | 8.00 மணி |

### அமைவிடம்

திருக்கருவூரானிலை எனும் கரூர் தலத்திற்கு வடக்கே 2 மைல் தொலைவில் இக்கோயில் அமைந்துள்ளது.

### வழித்தடம்

கரூர் சேலம் நெடுஞ்சாலையில் 5 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. கரூரிலிருந்து நகரப் பேருந்து மற்றும் சிற்றுந்து வசதிகள் உள்ளன.

### தொடர்பு முகவரி


பரம்பரை அறங்காவலர்,
அருள்மிகு பாலசுப்பிரமணியசுவாமி திருக்கோயில்,
வெண்ணெய்மலை,காதப்பாறை அஞ்சல், கரூர் மாவட்டம்.
தொலைபேசி எண் : 04324 - 220106




தஞ்சை அருள்மிகு பிரகதீசுவரர் கோயில், கரூர் அருள்மிகு கல்யாண பசுபதீசுவரர் கோயில், வெண்ணெய்மலை அருள்மிகு முருகன் கோயில் ஆகிய கோயில்களில் மட்டுமே சித்தர் கருவூராருக்கு தனி சன்னதிகள் அமைந்து உள்ளன.



# அருள்மிகு பாலசுப்பிரமணியசுவாமி திருக்கோயில்

## பாலமலை, பவித்திரம் கிராமம்,
## அரவக்குறிச்சி வட்டம், கரூர் மாவட்டம்.

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு பாலசுப்பிரமணியசுவாமி |
| இறைவி | அருள்மிகு வள்ளி, அருள்மிகு தெய்வானை |
| தீர்த்தம் | கந்த தீர்த்தம் |
| தல விருட்சம் | வில்வம் |
| ஆகமம் | காமிக ஆகமம் |

### தலச் சிறப்பு

இந்திரன் வழிபட்டு விமோசனம் பெற்ற தலம். அருணகிரிநாதரால் திருப்புகழ் பாடப்பெற்ற தலம். அழகிய முருகன், சிவனுக்கு தனிச்சன்னதி. இங்கு வழிபடும் பக்தர்களின் வேண்டுதல் நிறைவேறுகிறது.

### திருக்கோயிலின் தோற்றம்

இத்திருக்கோயில் சிறு குன்றின் மேல் கிழக்கு முகமாக அமைந்துள்ளது. மலையடிவாரத்தில் பெரிய மயில் சிலை வாகனம் மண்டபத்துடன் அமைந்துள்ளது. 40 படிக்கட்டுகள் கடந்தவுடன் இடும்பன் சன்னதி உள்ளது. அதன் மேல் 10 படிகளை கடந்தவுடன் வெளிப்பிரகாரத்தில் விநாயகர், மாதேஸ்வரர் சன்னதிகள் தனித்தனியாக அமைந்துள்ளது.

வெளிப்பிரகாரத்தில் வலம் வந்து மகா மண்டபம், அர்த்த மண்டபங்களை கடந்து ஸ்ரீ பாலசுப்பிரமணியரை தரிசிக்க வேண்டும்.

மலையின் மேற்கு பகுதியில் திருக்குளம் உள்ளது. இதில் நீராடினால் பாவங்கள் நீங்கும், இன்பங்கள் பெருகும் எனக் கூறப்படுகிறது.

## தல வரலாறு

பழம் பெருமைமிக்க புராண காலத்தில் சோழப் பேரரசு கருவூரைத் தலைநகராகக் கொண்டு சிவபக்தி சிகாமணியாகிய முசுகுந்த சக்ரவர்த்தி ஆண்ட கருவூர் ஆனிலை பசுபதீசுவரர் திருக்கோயிலின் மேற்பால் அமைந்துள்ளது. ஆனிலை பசுபதி ஊர் பட்டிக்கு அடங்காத பசுக்கள் மேயும் வனாந்திரமாக இருந்தது. இத்தலம் பாலமலை எனவும், ஷீரகிரி எனவும் வழங்கலாயிற்று. தனிப்பசு ஒன்று ஷீரகிரியில் மேய்ந்து வந்தது. அருவுருவமாகிய பிம்பத்தில் பால் சொறிந்து கொண்டு இருக்க மாடு மேய்க்கும் சிறுவன் அங்கு தென்பட்ட செய்தியை ராஜதானி மந்திரியிடம் சொல்ல, அவர் முசுகுந்த சக்ரவர்த்தியிடம் தெரிவித்தார். அன்றே அச்சிறுவன் முருகப் பெருமான் ரூபத்தில் காட்சி கொடுத்ததாகவும், முசுகுந்த சக்ரவர்த்தி கண்ணுற்று ஸ்ரீ பாலமுருகன் தலத்தை ஸ்தாபித்தார் என்பதும் புராண வரலாறு ஆகும்.

மேலும் ஸ்கந்த புராண காலத்தில் இந்நகரில் தேவேந்திரன் ( இந்திரன்) சூரபன்மாதி அசுரர்களுக்கு பயந்து அக்ஞாத வாசம் செய்தான். அவ்வமயம் நித்திய ஆத்மார்த்த பூஜைக்கு சிவலிங்கம் ஸ்தாபிதம் செய்தான். அதனால் இங்கு இருக்கும் சிவலிங்கத்திற்கு தேவேந்திர லிங்கம் என்று பெயர் பெற்றதாக சொல்லப்படுகிறது. இங்கு எழுந்தருளியிருக்கும் அம்மன் தேனாம்பிகை எனப் பெயர்பெற்றதாகவும் சொல்லப்படுகிறது. தேவேந்திரன் அக்ஞாத வாசம் செய்து கொண்டு இருந்த பொழுது பூஜைக்காக புஷ்பவனம் என்ற ஒரு நந்தவனத்தை ஸ்தாபித்ததாகவும், புஷ்ப வனம் தண்ணீர் இல்லாமல் காயத் தொடங்கிய போது இந்திரன் தவம் இருந்ததாகவும் அப்போது தேவேந்தீரேஸ்வரர் பிரசன்னமாகி புஷ்பவனத்திற்கு மேக ஸ்வரூபமாக மழை வருசித்தான் எனவும் கூறப்படுகிறது.

இந்நகருக்கு பவித்திரம், புனிதம், பவுதை, பவுதாபுரி, தூய்மையான பவித்திரம் என்றும் அழைக்கப்படுவதாகக் கூறப்படுகிறது. பால மரங்கள் சூழ்ந்த சோலை என்பதால் பாலமலை என்றும் பெயர் பெற்றதாக கூறப்படுகிறது. இந்த திவ்ய க்ஷேத்ரத்தின் கண் அருணகிரி நாதர் "செழுஞ்சோலையுற்ற பவுதாபுரிக்குள் திறமாகி நிற்கும் முருகோனே" என திருப்புகழில் பாடியுள்ளார்.

## பிரார்த்தனை

பாலமலையில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ முருகப் பெருமானை தரிசனம் செய்வதால் பல வினைகளை தீர்த்து வேண்டுவோர்க்கு வேண்டுவன அளித்து வினை தீர்ப்பான் என்பது கண்கண்ட உண்மையாகும். மேலும் இத்தல ஸ்ரீ முருகப்பெருமானை பிரார்த்தித்தால் திருமண தடை நீங்கும் எனவும், குழந்தை பாக்கியம் கிட்டும் என்பதும் கண்கண்ட உண்மையாகும்.

## திருவிழா

கந்த சஷ்டி உற்சவம் 7 நாட்கள் மிகவிமர்சையாக நடைபெற்று வருகிறது. தை மாதத்தில் திருத்தேர் திருவிழா 10 நாள் உற்சவமாக நடைபெற்று வருகிறது,

## நடை திறக்கும் நேரம்

காலை 6.00 மணி முதல் பகல் 12.00 மணிவரை

மாலை 5.00 மணி முதல் இரவு 7.00 மணிவரை

## பூஜை காலங்கள்

தினசரி இரண்டு கால பூஜைகள் நடைபெற்றுவருகிறது.

| | |
|---|---|
| உச்சிக்காலம் | பகல் 11.30 மணி |
| சாயரட்சை | மாலை 5.30 மணி |

## அமைவிடம்

கரூர் – கோவை தேசிய நெடுஞ்சாலையில் பவித்திரம் கிராமத்தில் இருந்து 2 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது.

## வழித்தடம்

கரூரிலிருந்தும், பரமத்தி வேலூரிலிருந்தும் பேருந்து வசதிகள் உள்ளன.

**தொடர்பு முகவரி :**

பரம்பரை அறங்காவலர்,
அருள்மிகு பாலசுப்பிரமணியசுவாமி திருக்கோவில்,
பாலமலை, பவித்திரம் அஞ்சல்,
கோவை – கரூர் நெடுஞ்சாலை, கரூர் மாவட்டம்.
அலைபேசி எண் 9786149608, 9787662303



# அருள்மிகு பாலசுப்பிரமணியசுவாமி திருக்கோயில்

புகழிமலை, வேலாயுதம்பாளையம். கரூர் மாவட்டம்.

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு பாலசுப்பிரமணியசுவாமி |
| தீர்த்தம் | நந்தவனக் கிணறு |
| தல விருட்சம் | ஆலமரம் |
| ஆகமம் | காரண, காமிகம் |
| பழமை | 500 -1000 வருடங்களுக்கு முன் |
| புராண பெயர் | புகழிமலை (ஆறுநாட்டார் மலை) |

**தலச்சிறப்பு**

நானூறு அடி உயரமுள்ள மலையின் அடிவாரத்தில் விநாயகர் சந்நிதி உள்ளது. மலையின் நுழைவாயில் மண்டபத்தில் மலையை நோக்கி மேற்கு திசையில் முருகனுடைய மயில்வாகன சந்நிதி அமைந்துள்ளது. மலையின் உச்சிக்கு சென்று கார்த்திகேயனை தரிசிக்க சிரமமில்லாமல் இருக்கும் உயரக் குறைவான 354 படிக்கட்டுக்ள் வழியாக மலைமேல் ஏற வேண்டும்.மூலஸ்தானத்திற்குள் ஸ்ரீ பாலசுப்பிரமணிய சுவாமி கிழக்கு பார்த்து நின்று தரிசனம் தருகிறார். ஒரு கையில் வேலும், மற்றொரு கையில் சேவல் கொடியும் சார்த்தப்பட்டு நின்ற நிலையில் அருள்பாலிக்கிறார். கீழ் இரு கைகள் அபய வரதமாகவும், மேல் வலக்கையில் வஜ்ஜிரக்கையுடனும், இடக்கையில் அட்ச மாலையும் வைத்துக்கொண்டு அருள் வழங்குகிறார். பின்புறம் அவரது மயில் வாகனம் வலப்புறம் தோகை விரித்து, இடப்புறம் வழியாக திரும்பி முருகனின் முகத்தை தரிசனம் செய்து கொண்டு இருக்கிறது.

## வரலாற்றுச் சிறப்பு

திரு. லூயிஸ் மூர்.ஐ.சி.எஸ். என்ற ஆங்கிலேயர் 1878 ம் ஆண்டில் திருச்சி மாவட்ட மூலக்குறிப்பில் புகழூரின் சிறப்பினை எழுதியுள்ளார். 1907 ம் ஆண்டில் ஹெமில்வே என்ற ஆங்கிலேயர் சுவாமி மற்றும் ஈஸ்வரன் பற்றிய குறிப்பு எழுதியுள்ளார்.

## புராணசிறப்பு

பிரம்மனுக்கு படைப்புத் தொழில் மீது உண்டான செருக்கை அழிக்க முடிவெடுத்தார் முருகப்பெருமான். பிரம்மனை அணுகினார். முருகன் அவரிடம் ஓம் என்னும் பிரணவ மந்திரத்தின் பொருள் விளக்கம் கேட்டார். ஆனால் அதற்குரிய விளக்கம் பிரம்மனால் அளிக்க முடியவில்லை. பிரணவத்திற்கு பொருள் சொல்ல முடியாததால் முருகன் பிரம்மாவைச் சிறையில் அடைத்தார்.சிறையில் பிரம்மா அடைபட்டதால் உலக உயிர்கள் உற்பத்தி குறைந்தது. அதனை ஈடு செய்ய முருகனே பிரம்மனின் படைப்புத் தொழிலையும் துவங்கினார். ஞானத்திற்கு அடையாளமான அட்ச மாலையை ஒரு கையிலும் அதனை தத்தம் செய்வதற்கான கமண்டலத்தை ஒரு கையிலுமெடுத்தார். பிரம்ம சாஸ்தாவானார். அந்நிலையில் அங்கே வந்த ஈசன் பிரம்மாவை சிறை பிடித்த உனக்கு, பிரணவத்தின் பொருள் தெரிந்தால் சொல் என்று கேட்டார். சுப்பிரமணியரோ போகிற போக்கில் கோட்டால் எப்படி? குருவுக்கு மரியாதை தந்து, சீடனாக இருந்து உபதேசம் கேட்டால் சொல்லப்படும் என்றார். ஈசனும் சீடனாக கை கட்டி வாய் பொத்தி சொல்லுங்கள் குருவே! என, அவர் அருகில் சென்று காது கொடுத்துக் கேட்டார். முருகன் ஆகிய பாலன் குருவாகி தன் தகப்பனுக்கு பிரணவத்தின் பொருளை முறையாக உணர்த்தினான். சுப்பிரமணியன் பாலனாக இருந்து திருவிளையாடல் புரிந்ததால் பாலசுப்பிரணியன் என அழைக்கப்பட்டான்.

## இலக்கியச் சிறப்பு

**அருணகிரிநாதர்**

பொருதவரு சூரர் கிரியுருவ வாரி
புனல் சுவற வேலை யெறிவோனே
புகலரிய தான தமிழ் முனிவரோது
புகழிமலை மேவு பெருமானே

– என திருப்புகழ் பாடியுள்ளார்.

### தனிச்சிறப்பு

கி.பி. முதல் நூற்றாண்டை ஒட்டி கொங்காயபன் என்ற சமண முனிவர் வாழ்ந்து வந்தார். இவர் யாறூரைச் சேர்ந்தவர். இயற்கையாய் அமைந்த குகையில் தங்கி நோன்பு நோற்றிருந்தார். இவருக்கு வசதியாக இக்குகை தளத்தில் படுக்கை அமைத்துக் கொடுத்தான் சேர மன்னன் இளங்கடுங்கோ.

### கல்வெட்டுக்கள்

இங்குள்ள கல்வெட்டில் தான் சங்க கால சேர மன்னர்களைப் பற்றிய குறிப்பு நமக்கு கிடைத்திருக்கிறது. அன்றியும் கருவூரைச் சேர்ந்த பொன் வணிகர் அத்தி என்பவர் தான் ஒரு படுக்கை அமைத்துள்ளார். மேலும் பிட்டன், கொற்றன், பீரன், ஓரி போன்ற பெயர்களும் இங்கே குறிக்கப்பட்டுள்ளன.

### திருவிழா

தைப்பூசத் திருத்தேர் திருவிழா.

### உற்சவங்கள்

சித்திரை விஷு, வைகாசி விசாகம், ஆனி மூலம், திருக்கார்த்திகை தீபத்திருவிழா. கந்த சஷ்டி விழா, பங்குனி உத்திரம்.

### நடை திறக்கும் நேரம்

காலை : 9.00 - 12.00 மணி வரை

மாலை : 5.00 - 7.00 மணி வரை

### பூஜை விபரம்

தினசரி இரண்டு கால பூஜைகள் நடைபெற்று வருகிறது.

| | |
|---|---|
| உச்சி காலம் | பகல் 12.00 மணி முதல் 12.30 மணிவரை |
| சாயரட்சை | மாலை6.00 மணி முதல் 6.30 மணிவரை |

### அமைவிடம்

கரூரில் இருந்து கரூர் – சேலம் மார்க்கத்தில் 20 கிலோ மீட்டர் தொலைவில் வேலாயுதம்பாளையம் - புகழிமலை என்னும் ஊர் அமைந்துள்ளது.

### வழித்தடம்

கரூரிலிருந்தும், கொடுமுடியிலிருந்தும், பரமத்தி வேலூரிலிருந்தும் பேருந்து வசதிகள் உள்ளன.

## இதர சிறப்பு

புகழூர் அருகில் காவிரி ஆற்றங்கரையின் தென்பகுதியில் உள்ள வேட்டமங்கலம் புகழியூர், தோட்டக்குறிச்சி, கடம்பன்குறிச்சி, வாங்கல், நெரூர் ஆகிய 6 கிராமங்களுக்கு புகழிமலையும், அங்கு நின்று அருள் வழங்கும் முருகனும் சொந்தமானவர்கள்.

ஆகையால் இம்மலையை “ஆறு நாட்டார் மலை ” என்று குறிப்பிட்டு மரியாதை விகுதி பெற்று “ ஆறுநாட்டார் மலை” என வழங்கத் துவங்கியது. சமணர்கள் இம்மலையில் வாழ்ந்து வந்தனர்

தொடக்கத்தில் பாலசுப்பிரமணிய சுவாமியின் அடையாளமாக முருகன் கை வேல் ஒன்றினை நட்டு வணங்கி வந்ததாகவும், வேலை ஆயுதமாகக் கொண்டு குறிஞ்சிக் கடவுள் குமரன் வாழும் மலை இருக்கும் ஊர் வேல் ஆயுதன் பாளையம் என வழங்கத் தொடங்கி வேலாயுதம்பாளையம் எனவும் வழங்கபெற்றது. புகழ்பெற்ற சமணர்கள் வசித்த புகழிடம் என்ற காரணத்தால் இந்த மலை “புகழி மலை ” என்றும், ஊர் “புகழூர் ” என்றும் பெயர் பெற்றது.

**தொடர்பு முகவரி :**


உதவி ஆணையர் / செயல் அலுவலர்
அருள்மிகு கல்யாண வெங்கடரமண சுவாமி திருக்கோயில்,
தாந்தோன்றிமலை. தொலைபேசி எண் : 04324 - 257531
இணையதளத்தொடர்பு : www.thanthoniperumal.tnhrce.in
மின்னஞ்சல் : thanthonriperumal@tnhrce.org


**அஷ்ட புஷ்பங்கள்**

| | |
|---|---|
| எருக்கு | பாதிரி |
| செந்தாமரை | அலரி |
| புன்னை | சண்பகம் |
| நந்தியாவர்த்தம் | நீலோற்பலம் |



# அருள்மிகு செல்லாண்டியம்மன் மற்றும் மாரியம்மன் திருக்கோயில்

## நொய்யல், மண்மங்கலம் வட்டம், கரூர் மாவட்டம்.

| | |
|---|---|
| இறைவி | அருள்மிகு செல்லாண்டியம்மன் |
| தலவிருட்சம் | புன்னை மரம் |
| ஆகமம் | காரண ஆகமம் |

### தலச்சிறப்பு

வெள்ளியங்கிரி மலையில் தோன்றி வரும் காஞ்சிமா நதி பேரூர் வரையும் அதற்கு கீழ் நொய்யல் என்றும் தற்போது அழைக்கப்படுகிறது வடதிசை நோக்கி அம்மனும், மண்டபத்தில் மேற்கு நோக்கி கருப்பண்ணசுவாமியும், கிழக்கு நோக்கி மதுரைவீரன் சுவாமியும், சன்னதி பின்புறம் விநாயகரும், ராஜகோபுரம் அருகில் பலிபீடமாக வேலாமரத்தான் காட்சியளிக்கிறார்கள். 5 கி.மீ. தொலைவில் சேமங்கி என்ற ஊரில் இதன் உப கோயிலான அருள்மிகு மாரியம்மன் கோவில் உள்ளது.

### தனிச் சிறப்பு

அருள்மிகு செல்லாண்டியம்மனின் அரிய சக்தியின் அற்புதப் பெருமையாவது பங்குனி திருவிழாவில் 10-ம் நாள் திருவிழாவின் போது கூர்மையான நீண்ட அரிவாளின் மீது பக்திப் பரவசத்தோடு அருள்பூரிக்க ஏறி நின்று வீதிவுலா வந்து பூசாரி அருள்வாக்கு சொல்வார்.

### திருவிழா காலங்கள்

பங்குனிமாதம் திருத்தேர் உற்சவம் நடைபெறும்

### நடை திறக்கும் நேரம்

காலை : 6.00 - பகல் 1.00 மணி வரை

மாலை : 4.00 - இரவு 8.30 மணி வரை

### பூஜை காலங்கள்

| | | |
|---|---|---|
| காலை சந்தி | காலை | 8.00 மணிக்கு |
| உச்சிகாலம் | பிற்பகல் | 12.00 மணிக்கு |
| சாயரட்சை | மாலை | 7.00 மணிக்கு |



### அமைவிடம்

கரூர் பேருந்து நிலையத்திலிருந்து 26 கி.மீ தொலைவில் உள்ளது.

### வழித்தடம்

கொடுமுடியிலிருந்து 7.கீ.மீ. தொலைவிலும், வேலூரிலிருந்து 15 கி.மீ. தொலைவிலும் உள்ளது.

**தொடர்பு முகவரி :**

உதவி ஆணையர் / செயல் அலுவலர்
அருள்மிகு கல்யாண வெங்கடரமண சுவாமி திருக்கோயில்,
தாந்தோன்றிமலை. தொலைபேசி எண் : 04324 - 257531
இணையதளத்தொடர்பு : www.thanthoniperumal.tnhrce.in
மின்னஞ்சல் : thanthonriperumal@tnhrce.org



# அருள்மிகு முனிமுக்தீசுவரசுவாமி திருக்கோயில்

## சின்னதாராபுரம், அரவக்குறிச்சி வட்டம், கரூர் மாவட்டம்.

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு முனிமுக்தீசுவரசுவாமி |
| இறைவி | அருள்மிகு அகிலாண்டேஸ்வரி |
| தலவிருட்சம் | வில்வம் |

### திருக்கோயில் அமைப்பு

கோபுர வாசலைக் கடந்து முன் சென்றால் வலம்புரி விநாயகர். அதனை அடுத்து கொடி கம்பமும், ஈசனை நோக்கிய நந்தியாரும் காணப்படுகின்றனர். துவார பாலகர்கள் இருபுறமும் அமைந்துள்ளனர். உள்ளிருக்கும் ஈஸ்வரனார் மேற்கு முகமாக எழுந்தருளியிருக்கிறார். அவரை வணங்குதல் முகமாக சூரியனார், சந்திரனார் அமைந்துள்ளனர். மண்டபத்தின் உள்ளே வலது பக்கத்தில் திருக்கல்யாண கோலத்தில் சுப்பிரமணியரும் அதனருகில் அகிலாண்டேஸ்வரி தனி சன்னதியில் தெற்கு நோக்கியும் எழுந்தருள்பாலிக்கிறார்கள்.மண்டபத்தின் இடது பக்கத்தில் பழனிமலை முருகனை ஒத்த வடிவில் தண்டபாணி அருள்பாலிக்கிறார். வெளிச்சுற்றில் நவக்கிரக மூர்த்திகளும், தனியாக இராகுவும், சனீஸ்வரனும் வீற்றிருக்கிறார்கள். வலதுபுறமாக பிரம்மாவின் உருவமும், ஈஸ்வரருக்கு கிழக்கே இலிங்கோத்பவரும், தெற்கே தட்சணாமூர்த்தியும் உள்ளனர். தனியாக சித்தி விநாயகர் கிழக்கு முகமாக அமர்ந்துள்ளார்..

### ஊரின் சிறப்பு

சின்னதாராபுரம் என்ற பெயர் தற்காலத்தில் ஏற்பட்டதாகும். கல்வெட்டுச் செய்திகள் வழியாகவும், செவிவழிச் செய்தியாகவும் கூறப்படுபவை வியத்தகு செய்திகளாகும். மகாபாரதத்தில் விராட மன்னனின் பெயரால் விராடம் என்றும், பின் கீழை இராஜபுரம் என்றும் வழங்கி வந்துள்ளது. இத்திருக்கோவில் மண்டப வெளிச்சுவற்றில் காணப்பட்ட கல்வெட்டால் இச்செய்தியை அறிய முடிகிறது.

### தனிச்சிறப்பு

இத்திருக்கோவிலின் தீர்த்தமாக கோவிலின் உள்ளே கிணறு ஒன்றும், தல விருட்சமாக வில்வ மரமும் உள்ளது. சிவனார் விரும்பி அணியும் கொன்றை மலர்களும், இங்கே பூத்துக்குலுங்குகின்றன. பழனி மலையில் உள்ள முருகன் போலவே தண்டபாணி சுவாமியும் இங்கு எழுந்தருளியுள்ளார். நவபாஷாணத்தில் வடிவமைக்கப்பட்ட இவரை வழிபடுவோரின் தீராத நோய் தீர்ப்பவராய் அருள்புரிகிறார்.

### உற்சவங்கள்

அமாவாசை, கிருத்திகை, சங்கடஹர சதுர்த்தி, பிரதோஷம் முதலான முக்கிய நாட்களில் விஷேச பூஜைகள் நடைபெறுகின்றன.

### திருவிழா

மாசி மாதத்தில் பதினான்கு நாட்கள் பல்வேறு வாகனங்களில் சுவாமி புறப்பாட்டுடன் பிரம்மோற்சவம் நடைபெறுகிறது. மாசி மகத்தன்று தேர்த்திருவிழா வெகு விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது.

### நடைதிறக்கும் நேரம்

காலை 7.00 மணி முதல் பகல் 12.00 மணி வரை

மாலை 4.00 மணி முதல் இரவு 8.00 மணி வரை

### பூஜை விவரம்

தினமும் ஒருகால பூஜை நடைபெற்று வருகிறது

| | |
|---|---|
| காலை சந்தி | காலை 8.00 மணி |



அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி

### அமைவிடம்

கரூரிலிருந்து பெரிய தாராபுரம் செல்லும் சாலையில் 35 கி.மீ. தொலைவில் உள்ளது.

### வழித்தடம்

கரூர் நகரிலிருந்தும் பெரியதாராபுரத்திலிருந்தும் பேருந்து வசதிகள் உள்ளன.

### தொடர்பு முகவரி


செயல் அலுவலர்
அ/மி கல்யாணபசுபதீஸ்வரசுவாமி திருக்கோயில்,
கரூர் நகரம், கரூர் வட்டம் (ம) மாவட்டம்
தொலைபேசி எண் : 04324 - 262010
மின்னஞ்சல் முகவரி - karurpasupathykoil@gmail.com
வலைதளமுகவரி - www.karurpasupatheeswarar.tnhrce.in



# அருள்மிகு மெய்பொருள்நாத சுவாமி திருக்கோயில்

## மொடக்கூர், கோவிலூர் (எ) சௌந்திராபுரம் அரவக்குறிச்சி வட்டம், கரூர் மாவட்டம்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு மெய்பொருள்நாத சுவாமி |
| இறைவி | அருள்மிகு சௌந்தரநாயகி, |
| | அருள்மிகு நல்லமங்கை, |
| | அருள்மிகு சத்தியவாகீஸ்வரி |
| தலவிருட்சம் | வில்வம், வன்னி |

**பெயர் வகை**

பழங்காலத்தில் அரசு ஆவணங்களில் சௌந்திராபுரம் என்ற பெயர் குறிக்கப்பட்டிருந்தது. கோவிலூர் என்று அழைக்கப்பெற்று இப்பெயரே இப்போது வழங்கப்பட்டு வருகிறது. கோவிலூர், மொடக்கூர் மேல்பாகம் ஊராட்சியில் அமைந்துள்ளது. ஆயினும் வழக்கத்தில் தற்போது மொடக்கூர் என்றே அழைக்கப்பட்டு வருகிறது.

**கோவிலின் தோற்றம்**

கோவிலூர் அருள்மிகு மெய்பொருள்நாதசுவாமி திருக்கோவில் கி.பி.11 ஆம் நூற்றாண்டின் இறுதியில் கொங்கு சோழரான இராஜராஜகரிகால சோழனால் கட்டப்பட்டதாக தெரிய வருகிறது. கொங்கு நாட்டில் முப்பத்தாறு கோவில்களை இம்மன்னனே கட்டினான் என்று கொங்கு நாட்டு வரலாறு கூறுகிறது.

## கோவிலின் அமைப்பு

சண்முக சித்தாறு, திருகிணி முத்தாறு என்ற இரு ஆறுகளும் கூடுமிடத்தில் கிழக்கு கரையில் மெய்ப்பொருள் நாதசுவாமி கோவில் கிழக்கு முகமாக அமைந்துள்ளது. இக்கோவில் சிறந்த சிற்பக்கலை வேலைபாடுகளுடன் விளங்குகிறது. கோவில் சதுர அமைப்பில் அமைந்துள்ளது

## திருப்பணியும், திருக்குடமுழுக்கும்

அருள்மிகு மெய்பொருள் நாதசுவாமி கோவில் கொங்கு சோழர் இராசராச கரிகாலன் என்ற மன்னாரால் பதினொன்றாம் நூற்றாண்டின் இறுதியில் கட்டப்பட்டது. ஆண்டுகள் பல கடந்த நிலையில் கோவிலைச் சீரமைக்க வேண்டி மொடக்கூர் கீழ்பாகம், மேல்பாகம் பொதுமக்களும் கலந்து ஆலோசித்து 17.06.2005 வெள்ளிக்கிழமை திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா சிறப்பாக நடத்தினர்.

## தலச்சிறப்புகள்

சுவாமி கோயிலின் வடமேற்கு திசையில் கிழக்கு முகமாக சத்யநாராயணபெருமாள் வீற்றிருக்கிறார். இத்திருக் கோயில் எண்ணூற்றைம்பது ஆண்டுகள் பழமை வாய்ந்ததாகும். இங்கு சத்தியவாகீஸ்வரி, (சௌந்திரநாயகி அம்மன்) சத்தியவாகீஸ்வரர் (மெய்ப்பொருள்நாதசுவாமி), சத்தியநாராயணப் பெருமாள் என்ற பெயரில் அதாவது சத்யத்தில் ஆரம்பிக்கும் மூன்று தெய்வங்களும் ஒரே இடத்தில் அமைந்துள்ள தலம் இதுஒன்றே ஆகும். இக்கோவிலில் உள்ள துர்க்கை அம்மனை வெகு நாட்களாகத் திருமணம் ஆகாத பெண்கள் தீபம் ஏற்றி வழிபட்டால் உடனே அப்பெண்களுக்கு திருமணம் கூடி வருவதாக ஐதீகம் உள்ளது.

## உற்சவங்கள்

ஸ்ரீ விநாயகர் சதுர்த்தி, ஆடிப்பெருக்கு, நவராத்திரி, தீபாவளி திருநாள், அன்னாபிஷேகம், திருக்கார்த்திகை தீபம், திருவாதிரை திருநாள், தைப்பொங்கல், மஹா சிவராத்திரி, பங்குனி உத்திரம் ஆகிய விழாக்கள் சிறப்பாக நடைபெறுகிறது.

## திருவிழா

திருக்கோவிலில் சித்திரைத்திருத்தேர் திருவிழா உற்சவம் சிறப்பாக நடைபெறுகிறது.

### கல்வெட்டுக்கள்

பழமை வாய்ந்த கோவிலூர் மெய்பொருள் நாதசுவாமி கோவிலில் அர்த்த மண்டபத்தின் வடபுற குமுதவரியிலும், தென்புற குமுத வரியிலும் இரண்டு கல் வெட்டுக்கள் உள்ளன. இவ்விரண்டு கல்வெட்டுக்களும் கொங்கு பாண்டிய மன்னன் வீரபாண்டியன் காலத்தவையாகும்.

### நடைதிறந்திருக்கும் நேரம்

காலை 7.30 மணிமுதல் பகல் 10.30 மணிவரை

மாலை 5.30 மணிமுதல் இரவு 7.00 மணிவரை

### பூஜைகாலம்

திருக்கோவிலில் தற்போது ஒரு கால பூஜை நடைபெற்று வருகிறது.

| | |
|---|---|
| காலை சந்தி | காலை 8.30 மணி |

### அமைவிடம்

கரூர் மாவட்டம், அரவக்குறிச்சி வட்டத்தில் மொடக்கூர் மேல்பாக ஊராட்சியில் சண்முகசித்தாரு, திருகிணி முத்தாறு என இரு ஆறுகளும் கூடுமிடத்தில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

### வழித்தடம்

இவ்வூர் கருவூர் நகரிலிருந்து தென்மேற்கு திசையில் முப்பது கிலோ மீட்டர் தொலைவில் உள்ள அரவக்குறிச்சியிலிருந்து பத்து கிலோ மீட்டர் தொலைவிலும், பள்ளப்பட்டியிலிருந்து பத்து கிலோ மீட்டர் தொலைவிலும் அமைந்துள்ளது. மேற்கண்ட ஊர்களிலிருந்து பேருந்து வசதிகள் உள்ளன.

### தொடர் முகவரி

செயல் அலுவலர்

அ/மி கல்யாணபசுபதீஸ்வரசுவாமி திருக்கோயில்,

கரூர் நகரம், கரூர் வட்டம் (ம) மாவட்டம்

தொலைபேசி எண் : 04324 - 262010

மின்னஞ்சல் முகவரி - karurpasupathykoil@gmail.com

# அருள்மிகு அகத்தீசுவர சுவாமி திருக்கோயில்

## திருமுக்கூடலூர். கரூர் மாவட்டம்.

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு அகத்தீசுவரர், |
| இறைவி | அருள்மிகு அஞ்சநாச்சியம்மன் |

### தலச்சிறப்பு

கோயில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. அமராவதி ஆற்றின் வடக்கு கரையில் தென்பக்க மதில் சுவர் கட்டப்பட்டுள்ளது. முன்புறம் கோபுரம் அமைக்க ஆரம்பிக்கப் பட்டது போல் உள்ளது. கோயில் மிகவும் பரந்த அளவில் மிகவும் உயரமான மதில் சுவற்றுடன் கட்டப்பட்டுள்ளது. முன்வாசல் அருகில் படித்துறை அமைந்துள்ளது. விமானம் தவிர இதர பகுதிகள் கல் கட்டிடமாக கட்டப்பட்டுள்ளது.

### தனிச்சிறப்பு

மூலவரான அருள்மிகு அகத்தீசுவரர் மணலால் வடிவமைக்கப்பட்டவர் எனவும், அகத்தியரால் வழிபட்ட பெருமை உடையது எனவும் புகழப்படுகிறது. பரிவார தெய்வங்களான அருள்மிகு விநாயகருக்கு தனி சன்னதியும், அருள்மிகு சுப்பிரமணியருக்கு தனி சன்னதியும் உள்ளது. அருள்மிகு மணிமுக்கீஸ்வரர் மற்றும் அருள்மிகு அழகு நாச்சியம்மன் ஆகிய சுவாமிகளுக்கும் தனி சன்னதி உள்ளது.

### நடைதிறக்கும் நேரம்

காலை 9.30 - 10.30 மணிவரை

### பூஜை நேரம்

ஒரு கால பூஜை காலை10.00 மணிக்கு நடைபெறுகிறது.

### அமைவிடம்

கரூரில் இருந்து ஈசான்ய பாகத்தில் சுமார் 20 கி.மீ. தொலைவில் அமராவதி ஆற்றின் வடக்கு கரையில் இத்திருக் கோயில் அமைந்துள்ளது.

**வழித்தடம்**

கரூரிலிருந்து நகரப் பேருந்து மற்றும் சிறிய பேருந்துகள் வசதி உள்ளது.

**தொடர்பு முகவரி :**


உதவி ஆணையர் / செயல் அலுவலர்
அருள்மிகு கல்யாண வெங்கடரமண சுவாமி திருக்கோயில்,
தாந்தோன்றிமலை. தொலைபேசி எண் : 04324 - 257531
இணையதளத்தொடர்பு : **www.thanthoniperumal.tnhrce.in**
மின்னஞ்சல் : **thanthonriperumal@tnhrce.org**


**அபிஷேகப் பொருட்களும் அவற்றின் பயனும் :**

| | | |
|---|---|---|
| நல்லெண்ணெய் | - | சுகம் |
| அரிசி மாவு | - | கடன் தீரல் |
| நெல்லிமுள்ளி | - | நோய்நீக்கம் |
| மஞ்சப்பொடி | - | வசீகரம் |
| பஞ்சகவ்யம் | - | தூய்மை |
| பஞ்சாமிர்தம் | - | ஜயம் |
| பால் | - | ஆயுள் |
| தயிர் | - | மக்கட்பேறு |
| நெய் | - | முத்தி |
| தேன் | - | சுகம் |
| கரும்பின் சாறு | - | பிணி நீக்கம் |
| எலுமிச்சை | - | எமபயம் போக்கல் |
| இளநீர் | - | போகம் |
| சந்தனம் | - | இலட்சுமிகடாட்சம் |
| கும்பம் | - | குற்றங்கள் தீரல் |



# அருள்மிகு கச்சேரிப்பிள்ளையார் திருக்கோயில்

## ஜவகர் கடைவீதி, கரூர் நகரம்.

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு கச்சேரிப்பிள்ளையார் |
| ஆகமம் | காரண ஆகமம் |

### தலச்சிறப்பு

சாலையின் மேற்கு நோக்கி கோவில் உள்ளது. கருவறையில் மூலவர் கச்சேரி பிள்ளையார் அமர்ந்த நிலையில் பெரிய உருவத்தில் கம்பீரமாக அமைந்துள்ளார். இத்திருக்கோவில் தூண்களில் மாடச் சிற்பங்களாக சிவபெருமான், வள்ளி தெய்வானை சமேதராக சுப்பிரமணியர் திருவுருவங்கள் வடிவமைக்கப்பட்டுள்ளன.

### தனிச்சிறப்பு

பழங்காலத்தில் நீதி வழங்கும் பணி மற்றும் தாலுகா அலுவலகம் இருந்த இடத்தையும் கச்சேரி என்று அழைப்பதுண்டு. இந்த கோயிலுக்கு அருகில் கச்சேரி இருந்ததாகவும், அங்கு இருந்த

அதிகாரிகள் ஸ்ரீ விநாயகப் பெருமானை வணங்கி அலுவல் புரிந்ததாகவும் அதன் காரணமாக கச்சேரி பிள்ளையார் என வழங்கப்பட்டதாகவும் சொல்லப்படுகிறது. இந்த விநாயகரை வணங்கி வந்தால் நீதிமன்ற வழக்குகள் விரைவில் வெற்றிபெறும் எனவும் கூறப்படுகிறது.

### திருவிழாக்கள்

தமிழ் மற்றும் தெலுங்கு வருடப்பிறப்பு, ஸ்ரீவிநாயகர் சதுர்த்தி, மகர சங்கராந்தி ஆகிய காலங்களில் விஷேச வழிபாடும், சங்கடஹர சதுர்த்தி உற்சவமும் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

### நடை திறக்கும் நேரம்

காலை : 7.00 மணி முதல் பகல் 10.00 மணி வரை

மாலை : 6.00 மணி முதல் இரவு 8.00 மணி வரை

### பூஜை காலங்கள்

| | |
|---|---|
| காலை சந்தி | காலை 9.30 மணிக்கு |
| சாயரட்சை | மாலை 6.30 மணிக்கு |

### திருக்கோவில் அமைவிடம்

இத்திருக்கோயில் கரூர் நகரின் மையப்பகுதியில் வணிக பெருமக்கள் நிறைந்துள்ள வணிக வீதியில் உள்ளது. கோவில் அமைந்துள்ள இடம் ஜவஹர் பஜார் என அழைக்கப் படுகிறது.

### வழித்தடம்

கரூர் பேருந்து நிலையத்திலிருந்தும், புகைவண்டி நிலையத்திலிருந்தும் தானியங்கி (ஆட்டோ) வசதி உள்ளது

### தொடர்பு முகவரி

உதவி ஆணையர் / செயல் அலுவலர்
அருள்மிகு கல்யாண வெங்கடரமண சுவாமி திருக்கோயில்,
தாந்தோன்றிமலை. தொலைபேசி எண் : 04324 - 257531
இணையதளத்தொடர்பு : www.thanthoniperumal.tnhrce.in
மின்னஞ்சல் : thanthonriperumal@tnhrce.org



# அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் அருள்மிகு சுப்ரமணியசுவாமி திருக்கோயில்

## தோகைமலை, குளித்தலை வட்டம், கரூர் மாவட்டம்.

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு சுப்ரமணியசுவாமி |
| இறைவி | அருள்மிகு வள்ளி, |
| | அருள்மிகு தெய்வானை |
| தீர்த்தம் | பிருங்கி தீர்த்தம் |
| தலவிருட்சம் | திருப்பாலை மரம் |

### தனிச்சிறப்பு

பிருங்கி மகரிஷியால் பூஜை செய்யப்பட்ட சிவலிங்கம் இத்திருக்கோயிலில் மீனாட்சி சுந்தரேசுவரர் என்ற திருநாமத்தில் அருள்புரிகிறார். இங்குள்ள தீர்த்தம் பிருங்கி மகரிஷியால் உண்டாக்கப்பட்டதால் இத்தீர்த்தத்திற்கு பிருங்கி தீர்த்தம் என்றும் பெயர் பெற்றுள்ளது.

### வரலாற்றுச் சிறப்பு

இப்பகுதியை ஆண்ட பாண்டிய மன்னர்களால் இத்திருக்கோயில் கட்டப்பட்டுள்ளது. இத்திருக்கோயிலில் ஆங்காங்கே மீன் சின்னம் பொறிக்கப்பட்டு உள்ளதால் இத்திருக்கோயில் பாண்டிய மன்னர்களால் திருப்பணி செய்யப்பட்டுள்ளதை அறியலாம்.

## தோகைமலை

இத்திருக்கோயில் அமைந்துள்ள மலை (குன்று) பார்ப்பதற்கு மயில் தோகையை விரித்து ஆடுவது போல் அமைந்துள்ளதால் இவ்வூர் தோகைமலை என்று பெயர்பெற்றது.

## திருவிழாக்கள்

கந்த சஷ்டி விழா இத்திருக்கோயிலில் பிரமோற்சவம் பத்து நாள் திருவிழாவாக நடைபெற்று வருகிறது. இவ்விழாவில் அருள்மிகு சுப்ரமணியசுவாமி திருவீதி உலாவும், சூரசம்ஹார விழாவும் நடைபெறுகிறது.

## நடைதிறக்கும் நேரம்

காலை 8.00 மணிமுதல் பகல் 10.00 மணிவரை

பிற்பகல் 2.00 மணிமுதல் மாலை 5.00 மணிவரை

## பூஜை நேரம்

தினமும் ஒரு கால பூஜை நடைபெற்று வருகிறது.

| | |
|---|---|
| காலைசந்தி | காலை 9.00 மணி |

## அமைவிடம்

குளித்தலையிலிருந்து மணப்பாறை செல்லும் தேசிய நெடுஞ்சாலையில் குளித்தலையிலிருந்து 25 கிலோமீட்டர் தொலைவில் தோகைமலை என்னும் ஊரில் சிறய குன்றின் மேல் அமைந்துள்ளது.

## வழித்தடம்

மணப்பாறை பேருந்து நிலையம் மற்றும் புகைவண்டி நிலையத்தி லிருந்து சுமார் 15 கி.மீ. தொலைவில் அமையப் பெற்றுள்ளது. திருச்சியிலிருந்து தரகம்பட்டி செல்லும் பேருந்தில் வருபவர்கள் தோகைமலை பேருந்து நிலையத்தில் இறங்கி திருக்கோயிலை அடையலாம்.

**தொடர்பு முகவரி**


செயல் அலுவலர்

அருள்மிகு மாரியம்மன் திருக்கோயில்,மணப்பாறை

தொலைபேசி எண் : 04332 - 260998



# அருள்மிகு பாம்பாலம்மன் திருக்கோயில்

லெட்சுமணம்பட்டி, கிருஷ்ணராயபுரம் வட்டம்,
கரூர் மாவட்டம்.

| இறைவி | அருள்மிகு பாம்பாலம்மன் |
|---|---|

**தலச்சிறப்பு**

குழந்தை பாக்கியம் இல்லாதவர்கள் இக்கோயிலுக்கு மூன்று வெள்ளிக்கிழமை வந்து அம்மனை வேண்டி ஏதாவது ஒரு வெள்ளிக்கிழமை மண் சோறு சாப்பிட்டால் குழந்தை பாக்கியம் கிடைப்பது உறுதி. இவ்வாறு குழந்தை பாக்கியம் பெற்றவர்கள் அம்மனுக்கு எடைக்கு எடை காணிக்கை செலுத்துகிறார்கள். இக்கோயிலுக்கு பெரும்பாலும், கரூரிலுள்ள வணிகப்பெருமக்கள், மற்றும் செல்வந்தர்கள் தமது வேண்டுதலை நிறைவேற்றும் பொருட்டு தமது காணிக்கைகளை பெரும் அளவில் செலுத்தி வருகிறார்கள். வேண்டிய வரத்தைக் கொடுக்கும் அம்மனாக இத்தலத்தில் கோவில் கொண்டு அருள்பாலிக்கிறார்.

**திருக்கோயில் அமைப்பு**

இத்திருக்கோயில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. மூலவர் அம்மன் புற்றாக உள்ளது. மூலவர் அம்மனுக்கு விமானம் கிடையாது. அம்மன் புற்று வடிவில் திறந்த வெளியில் காட்சி தருகிறாள்.

**புராணச் சிறப்பு**

விஷக்கடி தீர்க்கும் மருத்துவராக இவ்வம்மன் விளங்கி வருகிறாள். இத்திருக்கோயிலை சுற்றியுள்ள கிராமங்களில் வாழும் மக்களும் விஷம் தீண்டினால் உடனடியாக இத்திருக்கோயிலுக்கு

வந்து அம்மன் பிரசாதத்தை (வேப்பிலை மற்றும் தீர்த்தம்) சாப்பிட்டு இக்கோயிலை வலம் வந்தால் விஷம் இறங்கி, குணம் ஏற்படுகிறது. இவ்வாறு குணமாகும் பக்தர்கள், தமது வேண்டுதலை நிறைவேற்ற அம்மனுக்கு பிடித்தமான நாடகம் நடத்தி நேர்த்திக்கடனை செலுத்துகிறார்கள்.

## திருவிழாக்கள்

இரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை வைகாசி முதல் வாரம் 'சக்தி அழைத்தல்' என்ற திருவிழா 3 நாட்கள் சிறப்பாக நடைபெற்று வருகிறது.இது ஒரு பிரார்த்தனை தலம். செவ்வாய், வெள்ளி மற்றும் ஞாயிற்றுக் கிழமைகளில் பக்தர்கள் அதிகம் வருகிறார்கள்.

## நடை திறக்கும் நேரம்

காலை 7.00 மணி முதல் பகல் 12.30 மணி வரை

மாலை 4.30 மணி முதல் இரவு 7.00மணி வரை

## பூஜை நேரம்

தினமும் ஒரு கால பூஜை நடைபெற்று வருகிறது.

| | |
|---|---|
| உச்சிகாலம் | பகல் 12.00 மணி |

## அமைவிடம்

கரூர் - திருச்சி தேசிய நெடுஞ்சாலையில் மகாதானபுரம் அருகில் 15கி.மீ தொலைவில் லெட்சுமணம்பட்டி உள்ளது. மகாதானபுரம் புகைவண்டி நிலையத்திலிருந்து தெற்கே 6 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது.

## வழித்தடம்

கரூரிலிருந்தும், குளித்தலையிலிருந்தும், கிருஷ்ணராய புரத்திலிருந்தும் பேருந்து வசதிகள் உள்ளன.

## தொடர்பு முகவரி

**செயல் அலுவலர்,**
அருள்மிகு கடம்பவனேஸ்வரர் திருக்கோயில்,
குளித்தலை - 639 104. கரூர் மாவட்டம்.
போன் : 91 4323 225228
இணையதளத்தொடர்பு : www.kadambartemple.tnhrce.in
மின்னஞ்சல் : kadambarkoil@gmail.com



# அருள்மிகு சுந்தரேசுவரர் திருக்கோயில்

## நங்கவரம், குளித்தலை வட்டம், கரூர் மாவட்டம்.

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு சுந்தரேசுவரர் |
| இறைவி | அருள்மிகு கோமலாம்பிகை |
| தீர்த்தம் | காவிரி |
| தலவிருட்சம் | வில்வம், மகிழம் |
| ஆகமம் | யோகஜம் |

**தலச்சிறப்பு**

இத்தலத்து சுந்தரலிங்கத்தினை அகண்டேஸ்வர முனிவர் காசியிலிருந்து கொணர்ந்து பிரதிஷ்டை செய்து வழிபட்டுள்ளார்

**வரலாற்றுச் சிறப்பு**

சோழர்காலத்தில் திருப்பணிகள் மேற்கொள்ளப் பட்டுள்ளது.

**தனிச்சிறப்பு :**

அருள்மிகு அகண்டேஸ்வரர் சன்னதி இக்கோயிலில் தனியாக அமைந்துள்ளது. தீண்டா திருமேனி என்று அழைப்பர். இவரை வழிபடும் பக்தர்களுக்குரிய பிரச்சனைகள் அனைத்தும் நீங்கி நலம் பெற அருள்பாலிக்கிறார்.

## பொது தகவல்

நங்கவரம் பண்டைக் காலத்தில் இருந்த 6 வேத விற்பன்னர்கள் வாழ்ந்த பகுதியாகும். இங்கு வாழ்ந்த அந்தணர்கள் தமிழ், சமஸ்கிருதம் ஆகிய இரு மொழிகளிலும் வல்லவர்களாக விளங்கினர். 6 வேத பாடசாலைகள் சிறப்புற்று விளங்கின. இப்பகுதியில் வாழ்ந்த 6 வேத விற்பன்னர்கள் நாட்டின் பல பகுதிகளுக்கும் சென்று தெய்வத் திருப்பணிகளில் ஈடுபட்டு வந்தனர். நங்கவரம் திருக்கோயில் ஆகம முறைப்படி பராமரிக்கப்பட்டு வருகின்றது.

" நங்கவரம் சுந்த ரேசர்
நடனத்தைக் கண்டவர்க்கு
தங்கமெலாம் வந்து சேரும்
தகுந்தவாழ்வு உலகில் கூடும்"
என்பது ஆன்றோர் வாக்காகும்.

## உற்சவங்கள்

நவராத்திரி, கந்தர் சஷ்டி, ஆருத்ரா தரிசனம், பங்குனி உத்திரம்

## நடை திறக்கும் நேரம்

காலை 6.30 மணிமுதல் பகல் 12.30 மணிவரை
மாலை 4.30 மணிமுதல் இரவு 8.15 மணி வரை

## பூஜை காலங்கள்

தினசரி நான்கு காலபூஜைகள் நடைபெற்று வருகின்றன.

| | |
|---|---|
| காலை சந்தி | காலை 8.00 மணி |
| உச்சிக்காலம் | பகல் 12.00 மணி |
| சாயரட்சை | மாலை 5.30 மணி |
| அர்த்தஜாமம் | இரவு 8.00 மணி |

## இதர சிறப்புகள்

இத்திருக்கோயிலில் அகண்டேஸ்வர முனிவருக்கு தனி சன்னதி அமையப்பெற்று, வேண்டும் வரம் அளித்து பக்தர்களுக்கு குலதெய்வமாக இருந்து வருகிறார்.

### அமைவிடம்

திருச்சி – கரூர் நெடுஞ்சாலையில் பெருகமணியில் இருந்து தெற்கே 2 கிலோமீட்டர் தொலைவில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

### வழித்தடம்

திருச்சியிலிருந்தும் கரூரிலிருந்தும் பெருகமணியிலிருந்தும் பேருந்து வசதிகள் உள்ளன.

### தொடர்பு முகவரி

**செயல் அலுவலர்,**
அருள்மிகு கடம்பவனேஸ்வரர் திருக்கோயில்,
குளித்தலை – 639 104. கரூர் மாவட்டம்.
போன் : 91 4323 225228
இணையதளத்தொடர்பு : www.kadambartemple.tnhrce.in
மின்னஞ்சல் : kadambarkoil@gmail.com

### அட்டவீரட்டத்தலங்கள்

சிவபெருமான் தர்மம் தழைத்தோங்க, அதர்மத்தை அழிக்க தன்னுடைய வீரத்தை வெளிப்படுத்திய இடம் வீரட்டத்தலம் ஆகும்.

| | |
|---|---|
| திருக்கண்டியூர் | பிரமன் சிரத்தை வெட்டிய தலம் |
| திருக்கோவிலூர் | அந்தகன் என்ற அவுணனின் ஆணவத்தை அடக்கிய தலம் |
| திருவதிகை | முப்புரங்களை எரித்த தலம் |
| திருப்பறியலூர் | தக்கனின் வேள்வியை சிதைத்த தலம் |
| திருவிற்குடி | ஜலந்தராசூரனை சம்ஹாரம் செய்த தலம் |
| திருவழுவூர் | கஜாஸீரஸம்ஹாரம் செய்த தலம் |
| திருக்குறுக்கை | மன்மதனை எரித்த தலம் |
| திருக்கடையூர் | மார்க்கண்டேயருக்காக யமனை உதைத்த தலம் |

# அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோவில்

அரவக்குறிச்சி நகர், அரவக்குறிச்சி வட்டம்,
கரூர் மாவட்டம்.

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு சுப்பிரமணியர் |
| இறைவி | அருள்மிகு வள்ளி, |
| | அருள்மிகு தெய்வானை |
| ஆகமம் | காரண, காமிகம் |

**தலசிறப்பு**

சுப்பிரமணியர் தென்திசை நோக்கியும், கிழக்கு பக்கம் நவகிரகங்களும் உள்ளன.

**திருவிழாக்கள்**

தைப்பூசம், கிருத்திகை விழா சிறப்பாக நடைபெற்று வருகிறது.

**நடை திறக்கும் நேரம்**

காலை 6.30 மணிமுதல் பகல் 12.00 மணிவரை

**பூஜை விபரம்**

| | |
|---|---|
| பூஜை | ஒரு கால பூஜை |

**அமைவிடம்**

கரூர் – திண்டுக்கல் தேசிய நெடுஞ்சாலையில் கரூரிலிருந்து 30 கி.மீ. தொலைவில் இக்கோயில் அமைந்துள்ளது.

**வழித்தடம்**

கரூர் பேருந்து நிலையத்திலிருந்து பேருந்து வசதி உள்ளது.

**தொடர்பு முகவரி**

உதவி ஆணையர் / செயல் அலுவலர்
அருள்மிகு கல்யாண வெங்கடரமண சுவாமி திருக்கோயில்,
தாந்தோன்றிமலை. தொலைபேசி எண் : 04324 - 257531
இணையதளத்தொடர்பு : www.thanthoniperumal.tnhrce.in
மின்னஞ்சல் : thanthonriperumal@tnhrce.org



# அருள்மிகு சித்திவிநாயகர் திருக்கோயில்

## தேர்வீதி, கரூர் நகரம்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு சித்திவிநாயகர் |
| ஆகமம் | சைவ ஆகமம் |

**தலச்சிறப்பு**

புதிதாக தொழில் தொடங்குபவர்கள் இத்திருக் கோயிலில் எழுந்தருளியுள்ள தொழிற்கடவுளான ஸ்ரீவிஸ்வகர்மாவை வழிபட்டு தொழில் தொடங்குகின்றனர். வேதமாதாவான ஸ்ரீகாயத்ரி தேவியை வணங்கி வேதஅப்யாசம் மற்றும் கல்வி தொடங்குகிறார்கள்.

**வரலாற்றுச் சிறப்பு**

சுமார் 300 ஆண்டுகள் பழமைவாய்ந்த இத்திருக்கோவிலுக்கு கடந்த 11.6.2009 அன்று திருக்குடமுழுக்கு நடைபெற்றது.

**சிற்பச்சிறப்பு**

இத்திருக்கோவிலில் ஸ்ரீவிஸ்வகர்மா மற்றும் ஸ்ரீகாயத்ரி தேவி விக்ரகங்கள் மிகவும் நேர்த்தியாக வடிவமைக்கப்பட்டுள்ளன.

### தனிச்சிறப்பு

இத்தலத்து விநாயகப் பெருமானை வேண்டி வழிபடுவோர்க்கு வேண்டியது சித்திக்கும் சிறந்த பிரார்த்தனை தலமாக விளங்குகிறது.

### திருவிழா

ஸ்ரீ விநாயகர் சதுர்த்தி

### உற்சவங்கள்

சங்கடஹர சதுர்த்தி, சித்திரை முதல் நாள், நவராத்திரி, தனுர்மாதம், ஸ்ரீ விஸ்வகர்மஜெயந்தி, சஷ்டி மற்றும் கிருத்திகை

### நடைதிறக்கும் நேரம்

காலை 6.00 மணிமுதல் பகல் 12.30 மணிவரை

மாலை 4.00 மணிமுதல் இரவு 8.30 மணிவரை

### பூஜை காலங்கள்

தினசரி இரண்டு கால பூஜைகள் நடைபெற்றுவருகிறது.

| | |
|---|---|
| காலை சந்தி | காலை மணி 7.00 |
| அர்த்தஜாமம் | இரவு மணி 8.00 |

### அமைவிடம்

கரூர் நகரின் மையப்பகுதியில் தேர்வீதியில் அமைந்துள்ளது.

### வழித்தடம்

கரூர் பேருந்து நிலையத்திலிருந்து சிற்றுந்து மற்றும் தானியங்கி வசதிகள் உள்ளன.

### தொடர்புமுகவரி

செயல் அலுவலர்
அ/மி கல்யாணபசுபதீஸ்வரசுவாமி திருக்கோயில்,
கரூர் நகரம், கரூர் வட்டம் (ம) மாவட்டம்
தொலைபேசி எண் : 04324 - 262010
மின்னஞ்சல் முகவரி – karurpasupathykoil@gmail.com
வலைதளமுகவரி – www.karurpasupatheeswarar.tnhrce.in



# அருள்மிகு பேராளகுந்தாலம்மன் திருக்கோயில்

**வைகைநல்லூர், குளித்தலை,**
**கரூர் மாவட்டம்.**

| | |
|---|---|
| இறைவி | அருள்மிகு பேராளகுந்தாலம்மன் |
| தல விருட்சம் | வேம்பு |
| தீர்த்தம் | காவிரி |

## திருக்கோயில் அமைப்பு

இத்திருக்கோயில் குளித்தலை நகரின் மத்தியில் பேருந்து நிலையத்தில் அமைந்துள்ளது. இக்கோயில் காவிரி தென்கரையில் வடக்கு நோக்கி அமைந்துள்ளது. குளித்தலை நகர மக்களுக்கு காவல் தெய்வமாக விளங்குகிறது. இதில் அம்பாள் சன்னதி, மலையாள சன்னதி, முனீஸ்வரர் சன்னதி, விநாயகர் சன்னதி ஆகியவை உள்ளன.

## தலச்சிறப்பு

இவ்வூரின் (குளித்தலை) நடுவில் ஊமக்குழி என்னும் குளம் இருந்துள்ளது. இந்த குளத்தில் ஒரு குழந்தை தவறி விழுந்து இறந்து விட்டது. இக்குழந்தையை அவ்வூர் மக்கள் காவல் தெய்வமாக வணங்கி வருகிறார்கள்.

### திருவிழா

மாசி மாதம் காப்பு கட்டி த்திருவிழா

### நடைதிறப்பு

காலை 6.30 மணி முதல் – பகல் 12.30 மணி வரை

மாலை 4.00 மணி முதல் – இரவு 8.30 மணி வரை

### பூஜை நேரம்

தினசரி இருகால பூஜைகள் நடைபெற்று வருகிறது.

| | |
|---|---|
| உச்சிக்காலம் | பகல் 12.00 மணி |
| அர்த்தஜாமம் | இரவு 8.00 மணி |

### அமைவிடம்

குளித்தலை நகரின் மையத்தில் பேருந்து நிலையத்தில் இத்திருக்கோயில்அமைந்துள்ளது.

### வழித்தடம்

குளித்தலை புகைவண்டி நிலையத்திலிருந்தும், பேருந்து நிலையத்திலிருந்தும் போக்குவரத்து வசதிகள் உள்ளன.

### தொடர்பு முகவரி

**செயல் அலுவலர்,**
அருள்மிகு கடம்பவனேஸ்வரர் திருக்கோயில்,
குளித்தலை – 639 104. கரூர் மாவட்டம்.
போன் : 91 4323 225228
இணையதளத்தொடர்பு : www.kadambartemple.tnhrce.in
மின்னஞ்சல் : kadambarkoil@gmail.com

### பஞ்சவசிஷ்டாரண்ய தலங்கள்

பேளூர்
ஏத்தாப்பூர்
ஆத்தூர்
ஆறகளூர்
கூகையூர்



# அருள்மிகு வியாக்ரபுரீசுவரர் திருக்கோயில்

## புலியூர் கிராமம், கரூர் மாவட்டம்.

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு வியாக்ரபுரீசுவர சுவாமி |
| இறைவி | அருள்மிகு கருணாகடாக்ஷி அம்பாள் |
| தல விருட்சம் | வில்வம் |
| ஆகமம் | காமிகம் |
| பழமை | (கி.பி. 1178 - 1218) |
| புராண பெயர் | வியாக்ரபுரி (வியாக்ரம் - புலி, புரி - ஊர்) |

**தல வரலாறு :**

முனிவர்கள் பலர் இறைவனடி சேரவும், அவரது ஆடல் காட்சியை காண்பதற்காகவும், தங்களது தவத்தினால் இறைவனிடம் பல அரிய வரங்களைப் பெற, அவற்றுள் ஒருவராக இருந்த புலிக்கால் முனிவர் கலியுகத்தில் இத்தலத்தில் ஆதி மூலவரான சிவனை ஆலிங்கனம் செய்து தனது புலிப்பாதங்களால் இறைவனை தழுவி பூஜை செய்துள்ளார்.

சிவ பூஜையை ஏற்ற இறைவன் புலிக்கால் முனிவர் வியாக்ரபாதர் பூஜை செய்ததன் பலனாக இறைவன் தனது ஆடல் காட்சியை " மேலை சிதம்பரத்தில் பதஞ்சலியுடன் காண்பாயாக " என்று மேற்கு திசையில் ஜோதியாக உணர்த்த வியாக்ரபாதர் உடனே அக்காலத்தில் ஆட்சி செய்த மூன்றாம் குலோத்துங்க சோழனிடம் இங்கு ஆலயம் எழுப்பி வழிபட வேண்டும் என்று கூறினார்.

இத்திருக்கோவிலின் இறைவனை கிருதயுகத்தில் இலக்ஷ்மி தேவியும், திரேதாயுகத்தில் கருட பகவானும், துவாபரயுகத்தில் ஆஞ்சநேயரும், கலியுகத்தில் வியாக்ரபாத முனிவரும் ஆன்மார்த்த பூஜை செய்ததாக புராண வரலாறு கூறுகிறது.

## தனிச் சிறப்புகள்

இத்திருக்கோயில் கல்வெட்டுச் சான்றின்படி சோழ மன்னர் மூன்றாம் குலோத்துங்க திரிபுவன சக்கரவர்த்தி ஆட்சிக்காலத்தில் கட்டப்பட்டுள்ளது. (கி.பி. 1178 – 1218)

இத்திருக்கோயில் மூலவர் சிவபெருமான் மேற்கு திசை நோக்கியும், அம்பாள் சிவனுக்கு இடப்புறம் எதிர் திசை நோக்கியும் தனி மண்டபம் கொண்டு எங்கும் காணாத சிறப்புடன் அருள்பாலிக்கின்றார்.

இத்திருக்கோவில் முருகப்பெருமான் தாய் தந்தையர் (சுவாமி – அம்பாள் ) இடையில் குழந்தை வடிவில் வலது கையில் தாமரைமலருடன் ''பாலசுவாமி ''என்ற ரூபத்தில் அருள்பாலிக்கிறார்.

இத்திருக்கோயிலில் ஆத்மநந்தி, தர்மநந்தி என்று இரு நந்திகேஸ்வரர்கள் உள்ளன.

இத்திருக்கோயிலில் வியாக்ரபாதர் பூஜை செய்த ஆதிநாதரின் இலிங்கத் திருமேனியில் இன்றும் அவர் புலிப் பாதங்களால் தழுவி பூஜித்ததால் ஏற்பட்ட புலி நகக் கீறல்களைக் காண முடிகிறது.

சோழர் காலத்தில் நிர்மாணிக்கப்பட்ட இத்திருக்கோவில் “சோமாஸ்கந்தர் ” என்னும் வடிவத்தில் (சோ – சிவன், உமா – பார்வதி, இடையில் ஸ்கந்தர் – முருகன் ) இறைவனை தரிசனம் செய்யும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது.

## உற்சவங்கள்

மாதாந்திர பிரதோஷம், கிருத்திகை, அஷ்டமி பைரவர் பூஜை, நவராத்திரி, கார்த்திகை சோமவார 108 சங்காபிஷேகம், ஐப்பசி மாத அன்னாபிஷேகம், மாசி மாத “ ரோகிணி ” நட்சத்திரத்தில் வருஷாபிஷேக விழா, ருத்ராபிஷேகம், ஏகதின லட்சார்ச்சனை மற்றும் விசேஷ பூஜைகள் சிறப்பாக நடைபறுகின்றன.



### நடைதிறக்கும் நேரம்

காலை 7.00 மணிமுதல் பகல் 10.00 மணிவரை

மாலை 5.00 மணிமுதல் இரவு 7.00 மணிவரை

### பூஜை நேரம்

தினமும் ஒரு கால பூஜை நடைபெற்று வருகிறது.

| | |
|---|---|
| காலை சந்தி | காலை மணி 8.00 |

### கோவில் அமைவிடம்

கரூர் – திருச்சி தேசிய நெடுஞ்சாலையில் கரூரிலிருந்து கிழக்கே 10 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது.

### வழித்தடம்

கரூரிலிருந்து பேருந்து மற்றும் சிற்றுந்து வசதிகள் உள்ளன.

**தொடர்பு முகவரி :**

பரம்பரை அறங்காவலர்,
அருள்மிகு வியாக்ரபுரீசுவரர் திருக்கோயில்
புலியூர் கிராமம், கரூர் மாவட்டம்.
அலைபேசி எண் : 9788852227



# அருள்மிகு ஆளவந்தீசுவரர் திருக்கோயில்

## பழையஜெயங்கொண்டம் கிருஷ்ணராயபுரம் வட்டம், கரூர் மாவட்டம்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு ஆளவந்தீசுவரர் |
| இறைவி | அருள்மிகு ஆரணவல்லி |
| தீர்த்தம் | காவேரி |
| தலவிருட்சம் | வில்வம் |
| ஆகமம் | காமிக ஆகமம் |

### தலச்சிறப்பு

இத்திருக்கோயிலில் பிரதோஷகாலங்களில் அருள்மிகு ஆளவந்தீசுவரர் நேராக பேசுவதும் ஆடுவதும் பாடுவதுமாக இருந்து அருள்கிறார் என்பது சிறப்பு. இத்திருக்கோயில் திருக்குளத்தில் அதிகாலை நீராடி சுவாமியை வழிபட்டு வந்தால் பக்தர்களின் பிரார்த்தனைகள் நிறைவேறும்.

### வரலாற்றுச் சிறப்பு

இத்திருக்கோயில் இராஜேந்திர சோழன் காலத்தில் 12ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்ட திருக்கோயிலாகும். இரண்டு தள நாகர விமானம், எளிய முகமண்டபம், பெருமண்டபம் கொண்டு அமைந்துள்ளது. கருங்கற்களால் கட்டப்பட்டது.

### சிற்பச் சிறப்பு

முருகபெருமான் சிலையை தட்டினால் ஒவ்வொரு இடத்திலும் ஒவ்வொரு வகையான ஓசை வெளிப்படுகிறது. இத்திருக்கோயிலுக்கு சொந்தமான தெப்பக்குளத்தின் நான்கு புறமும் பளிங்கு கற்கள் தோற்றத்துடன் 26 நந்தி சிலைகள் சிறப்பாக காட்சி தருகிறது. மேலும் மேற்குபுற சுவரில் கன்னிமார் சிலைகளும் உள்ளன.

### உற்சவங்கள்

நவராத்திரி, அன்னாபிஷேகம், திருக்கார்த்திகை, மற்றும் மாதந்தோறும் சிவராத்திரி

### நடைதிறக்கும் நேரம்

காலை 8.00 மணிமுதல் பகல் 12.00 மணிவரை
மாலை 5.00 மணிமுதல் இரவு 8.00 மணிவரை

### பூஜை காலம்

தினசரி ஒருகால பூஜை நடைபெற்று வருகிறது.

| | |
|---|---|
| காலை சந்தி | காலை 8.00 முதல் 9.30 மணிக்குள் |

### அமைவிடம்

கரூர் - திருச்சி நெடுஞ்சாலையில் கிருஷ்ணராயபுரத்திற்கு தெற்கே 5 கி.மீ. தொலைவில் இத்தலம் உள்ளது.

### வழித்தடம்

கரூரிலிருந்தும் திருச்சியிலிருந்தும், கிருஷ்ணராய புரத்திலிருந்தும் பேரூந்து வசதிகள் உள்ளன.

### தொடர்பு முகவரி

செயல் அலுவலர்
அருள்மிகு திருக்கண்மாலீஸ்வரர் திருக்கோயில்
கிருஷ்ணராயபுரம் அஞ்சல், கிருஷ்ணராயபுரம் நகர் மற்றும்
கரூர் மாவட்டம்.



# அருள்மிகு திருக்கண்மாலீசுவரர் திருக்கோயில்

## கிருஷ்ணராயபுரம் நகர் & வட்டம், கரூர் மாவட்டம்.

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு திருக்கண்மாலீசுவரர் |
| இறைவி | அருள்மிகு மதுகரவேணி |
| தீர்த்தம் | காவேரி |
| தலவிருட்சம் | வில்வம் |
| ஆகமம் | காமிக ஆகமம் |

### தலச்சிறப்பு

பாடல் பெற்ற தலங்களான திருக்காசி, திருக்கடையூர், போன்று திருக்கண்மாலீசுவரர் வைப்புத்தலமாக விளங்குகிறது. காவிரியின் தென்கரை தலமாகவும், சோமாஸ்கந்த தலமாகவும், காசிபாணங்களே பஞ்சலிங்கங்களாக பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளதால் விஸ்வநாததலமாகவும், முக்தி தலமாகவும் விளங்குகிறது.

### வரலாற்றுச் சிறப்பு

மும்முடி சோழ மன்னர்கள் உறையூரை தலைநகராகக் கொண்டு ஆண்டுவந்தபோது இவ்வாலயத்தினை கட்டி திருக்கண்மாலீசு வரருக்கும், தட்சிணாமூர்த்தி, உமா மகேஸ்வரருக்கும் தனித்தனி சன்னதிகள் அமைத்து திருமுக்கட்பெருமான், சோழீசர் என வழங்கி வந்துள்ளனர். பிற்காலத்தில் விஜயநகர பேரரசர் கிருஷ்ணதேவராய மன்னர் இவ்வாலயத்திற்கு திருப்பணிகள் செய்து புதுப்பித்து சுவாமி திருநாமம் திருக்கண்மாலீஸ்வரர் எனவும், இவ்வூரினை

**தனிச்சிறப்பு**

இத்திருக்கோயிலின் மூலவர் மற்றும் அம்பாளுக்கு தேனால் அபிஷேகம் செய்து வழிபாடு செய்தால் குழந்தை பாக்கியம் கிட்டும் என்பது ஐதீகம். இத்திருக்கோயிலில் உள்ள துர்க்கை அம்மனை வேண்டுவோருக்கு திருமண பாக்கியம், புத்திரபாக்கியம் கிடைக்கிறது.

**உற்சவங்கள்**

நவராத்திரி, ஆடிப்பூரம், ஆடி 18, ஆனி திருமஞ்சனம், அன்னாபிஷேக கட்டளை, தைபூசம் கட்டளை.

**நடைதிறக்கும் நேரம்**

காலை 5.30 மணி முதல் பகல் 11.00 வரை

மாலை 4.00 மணி முதல் இரவு 8.00 மணி வரை

**பூஜை காலங்கள்**

தினசரி நான்கு கால பூஜைகள் நடைபெற்று வருகின்றன.

| | |
|---|---|
| காலை சந்தி | காலை 8.00 முதல் 9.00 மணிக்குள் |
| உச்சிகாலம் | காலை 10.30 முதல் 11.00 மணிக்குள் |
| சாயரட்சை | மாலை 5.30 முதல் 6.00 மணிக்குள் |
| அர்த்தஜாமம் | இரவு 7.30 முதல் 9.00 மணிக்குள் |

**அமைவிடம்**

கரூர் – திருச்சி நெடுஞ்சாலையில் கிருஷ்ணராயபுரம் அமைந்துள்ளது. சித்தலவாய் இரயில் நிலையத்திலிருந்து 0.500 கி.மீ. தொலைவில்இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

**வழித்தடம்**

கரூரிலிருந்தும் திருச்சியிலிருந்தும் குளித்தலை யிலிருந்தும் பேருந்து வசதிகள் உள்ளன.

**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்
அருள்மிகு திருக்கண்மாலீஸ்வரர் திருக்கோவில்
கிருஷ்ணராயபுரம் நகர் & வட்டம், கரூர் மாவட்டம்.



# அருள்மிகு மதுக்கரை செல்லாண்டியம்மன் திருக்கோயில்

## திருக்காம்புலியூர், கிருஷ்ணராயபுரம் வட்டம், கரூர் மாவட்டம்.

| | |
|---|---|
| இறைவி | அருள்மிகு மதுக்கரை செல்லாண்டி அம்மன் |
| தீர்த்தம் | காவிரி |
| தல விருட்சம் | வேம்பு |

**தலச் சிறப்பு :**

சேர, சோழ, பாண்டிய மன்னர்களால் இத்திருக்கோயில் திருப்பணி செய்யப்பட்டுள்ளது.

**வரலாற்றுச் சிறப்பு**

பொன்னர். சங்கர் வளர்ந்த இடம். சுமார் 1000 ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்ட கோவில் ஆகும்.

**சிற்பச் சிறப்பு**

அம்மன் எட்டு திருக்கரங்களுடன் சிறிது தலையை சாய்த்தவாறு அருள்பாலிக்கிறார்..

இத்திருக்கோயில் காவிரியாற்றின் கரைக்கு உள்ளே அமைந்துள்ளது எங்கும் இல்லாத தனிச் சிறப்பாகும்.

பாகப்பிரிவினை, திருமணத்தடை, குழந்தை பாக்கியம் வேண்டி அம்மனை பிரார்த்தனை செய்தால் நன்மையில் முடியும்.

## உற்சவங்கள்

சித்திரை தமிழ் வருடப்பிறப்பு, ஆடி 18, புரட்டாசி நவராத்திரி. தீபாவளி, திருக்கார்த்திகை, மகாசிவராத்திரி

## நடை திறக்கும் நேரம்

காலை 6.00 மணி முதல் மாலை 6.00 மணி வரை

## பூஜை காலங்கள்

தினசரி மூன்று கால பூஜைகள் நடைபெற்றுவருகிறது.

| | | |
|---|---|---|
| காலை சந்தி | காலை | மணி 6.30 - 7.00 மணி |
| உச்சிக்காலம் | பகல் | மணி 11.00 - 12.00 மணி |
| சாயரட்சை | மாலை | மணி 6.00 |

## கோயில் இருப்பிடம்

கரூர் - திருச்சி தேசிய நெடுஞ்சாலையில் மாயனூரிலிருந்து 1½ கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது.

## வழித்தடம்

கரூரிலிருந்தும் கிருஷ்ணராயபுரத்திலிருந்தும் பேருந்து வசதிகள் உள்ளன.


### தொடர்பு முகவரி

பரம்பரை தர்மகர்த்தா,
அருள்மிகு மதுக்கரை செல்லாண்டி அம்மன் கோவில்,
திருக்காம்புலியூர், மாயனூர் (அஞ்),
கிருஷ்ணராயபுரம் வட்டம், கரூர் மாவட்டம்.
அலைபேசி எண் : 9994360640








# அருள்மிகு கதிர்நரசிங்கப் பெருமாள் திருக்கோயில்

## தேவர்மலை, கடவூர் வட்டம், கரூர் மாவட்டம்.

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு கதிர்நரசிங்கப்பெருமாள் |
| இறைவி | அருள்மிகு கமலவள்ளித்தாயார் |
| தீர்த்தம் | பிரம்ம தீர்த்தம் |
| தலவிருட்சம் | வில்வம் |
| ஆகமம் | பாஞ்சராத்ரம் |

**தலச் சிறப்பு**

ஹிரண்யகசிபு என்னும் அசுரனிடமிருந்து அவன் குழந்தை பிரஹலாதனை காக்கும் பொருட்டு நரசிம்ம அவதாரம் எடுத்து ஹிரண்யனை வதம் செய்து குழந்தை பிரஹலாதனை காத்த பின் வேதம் கற்ற பிரமம் அறிந்தவன் அசுரனாயினும் அவனை கொன்றதால் சிறிது நேரமே நீடித்த அவதாரமாயினும் நரசிம்மரையும் பிரம்மஹத்தி தோஷம் பீடிக்கிறது. அதனால் பூமியும் மற்ற உலகங்களும் அழிந்துவிடுமோ? என்று அஞ்சி தேவர்கள் பெருமாளை சாந்தப் படுத்த முயற்சித்தனர். அவ்விதமாக இந்த தலத்தில் தேவர்கள் ஒன்று கூடி பெருமாளை வழிமறித்து சாந்தப்படுத்தினர். எனவே இவ்விடம் தேவர்மறி என்றும் பின்னர் அதுவே தேவர்மலை என்றும் ஆயிற்று தேவர்கள் பெருமாளை மறித்தபோது பூமியில் தீர்த்தம் பீறிட அதனை எடுத்து பெருமாளுக்கு அபிஷேகம் செய்யும் போது தன்னைப் பீடித்த பிரம்மஹத்தி தோஷம் நீங்கியவராக இத்தலத்தில் சேவை சாதிக்கிறார். இங்குள்ள பிரம்ம தீர்த்தத்தில் நீராடுவதால் அனைத்து தோஷங்களும் குறிப்பாக பிரம்மஹத்தி தோஷம் விலகும்.

### வரலாற்றுச் சிறப்பு

பல்லவர் கால கட்டடக்கலை உள்ளடக்கிய நாயக்கர் காலத்தில் திருப்பணி செய்யப்பட்டுள்ளது.

### சிற்பச் சிறப்பு

மூலவர் அழைத்தல் மற்றும் அபய கரங்களுடனும், நெற்றிக்கண்ணுடனும், வீராசனம் என்னும் அமர்ந்த திருக்கோலத்தில் காட்சி தருகிறார். சுமார் 1000 ஆண்டுகளுக்கும் மேற்பட்ட அரிய திருமேனி ஆகும். மேலும் பிரம்ம தீர்த்த குளத்தின் சுற்றுச்சுவற்றில் மேற்கு பக்கம் கிழக்கு நோக்கிய கோலத்தில் சீதாதேவி, இராமர், லட்சுமணர் ஆஞ்சநேயர் சிற்பங்கள் கல்லில் வடிக்கப்பட்டுள்ளது.

### தனிச்சிறப்பு

தனியாக அமைந்துள்ள ஸ்வர்ண ஆகர்ஷண பைரவரை தேய்பிறை அஷ்டமியில் பூஜை செய்தால் அனைத்து வியாபாரம் மற்றும் கடன் பிரச்சனைகளுக்கும் நலம் கிட்டும். பிரதோஷ வேளையில் சன்னதியை 11 முறை வலம் வந்து சேவித்தால் கஷ்டங்கள் தீவினைகள் அகலும்.

### இதர சிறப்புகள்

சகல தோஷ நிவர்த்தியும் மற்றும் பிரம்ம ஹத்தி தோஷ நிவர்த்தியும் தரக்கூடிய பிரம்ம தீர்த்தம், அனைத்து மனோகார்ய சித்தியும் தரக்கூடியவராக அழைத்து அபயம் தரக்கூடியவராக, நெற்றிக்கண்ணுடன் சங்குசக்கரம் இரண்டிலும் ஐந்தைந்து ஜீவாலைகளுடனும் உக்ர ஜயவீரம் என்னும் அம்சத்துடன் பெருமாள் இங்கு சேவை சாதிக்கிறார்.

### திருவிழாக்கள்

வைகாசி மாதம் பிரம்மோற்சவம் 10 நாட்கள் புரட்டாசி 3 ம் சனிக்கிழமை மாலை திருக்கோடி தீபம் ஏற்றல்

### நடை திறக்கும் நேரம்

காலை 8.00 மணிமுதல் பகல் 12.00 மணிவரை
மாலை 4.30 மணிமுதல் இரவு 6.30 மணிவரை



### பூஜை காலங்கள்

தினசரி ஒரு கால பூஜை நடைபெற்று வருகிறது.

| | |
|---|---|
| காலை சந்தி | காலை 9.00 முதல் 10.00 மணிக்குள் |

### அமைவிடம்

திருச்சி – பாளையம் வழித்தடத்தில் குருணி குளத்துப்பட்டி நிறுத்தம் வடக்கே 1.கி.மீ தொலைவில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது கரூர் – திண்டுக்கல் வழித்தடத்தில் பாளையம் நிறுத்தம் அங்கிருந்து திருச்சி – சாலையில் குருணிகுளத்துப்பட்டி வடக்கே 1. கி.மீ. தொலைவில் உள்ளது.

### வழித்தடம்

திருச்சி – பாளையம் வழித்தடத்திலும் கரூர் – திண்டுக்கல் வழித்தடத்திலிருந்தும் பேருந்து வசதிகள் உள்ளன.

### தொடர்பு முகவரி

செயல் அலுவலர்
அருள்மிகு கதிர்நரசிங்க பெருமாள் திருக்கோயில்
தேவர் மலை, கடவூர் வட்டம், கரூர் மாவட்டம்.

### அலுவலகம்

செயல் அலுவலர்
அருள்மிகு திருக்கண்மாலீஸ்வரர் திருக்கோவில்
கிருஷ்ணராயபுரம் நகர் & வட்டம், கரூர் மாவட்டம்.



# அருள்மிகு செம்பொன்ஜோதீசுவரர் திருக்கோயில்

## இலாலாபேட்டை, கிருஷ்ணராயபுரம் வட்டம், கரூர் மாவட்டம்.

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு செம்பொன்ஜோதீசுவர சுவாமி |
| இறைவி | அருள்மிகு தர்மசம்வர்த்தினி |
| தீர்த்தம் | காவிரி |
| தல விருட்சம் | வில்வம் |

**தல வரலாறு**

சுமார் 500 ஆண்டுகள் பழமை வாய்ந்த இத்திருக்கோயில் புதிதாக கட்டப்பட்டு 26.06.2013 ல் மகாகும்பாபிஷேகம் செய்யப்பட்டது. இத்திருக்கோயிலில் இறைவன் இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியா சக்திகளை அளிக்கின்ற ஜோதீஸ்வரூபனாகவும் காட்சி தருகிறார்.

**பிராத்தனை**

இத்திருக்கோயில் சுற்றுப்புற மக்களின் பிரார்த்தனை தலமாகும். அம்மை அப்பனாக, சிவனும் பார்வதி தேவியும் இத்திருத்தலத்தில் காட்சி அளிக்கின்றனர். தாய் தந்தையிடம் பிள்ளைகள் பெறுகின்ற பலன்கள்போல் இப்பகுதி மக்கள் இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் இறைவியை பக்தியுடன் வழிபட்டு பலன் பெறுகின்றனர். நோய்கள் தீர்க்கும் திருத்தலம்.

செம்பொன் ஜோதீசர் தர்மசம் வர்த்தினி<br>
நம்பியே தொழுவார் நாளும் உயர்வு

### உற்சவம்

ஆரூத்ரா தரிசனம், மகா சிவராத்திரி, சித்ரா பௌர்ணமி.

### நடை திறக்கும் நேரம்

காலை 6.00 மணி முதல் பகல் 12.30 மணி வரை

மாலை 4.30 மணி முதல் இரவு 8.15 மணி வரை

### பூஜை காலங்கள்

தினசரி இரண்டு கால பூஜைகள் நடைபெற்று வருகிறது.

| | |
|---|---|
| காலை சந்தி | காலை 7.30 மணி |
| சாயரட்சை | மாலை 5.30 மணி |

### அமைவிடம்

திருச்சி - கரூர் தேசிய நெடுஞ்சாலையில் லாலாபேட்டை யில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

### வழித்தடம்

கரூரிலிருந்தும், கிருஷ்ணராயபுரத்திலிருந்தும் பேருந்து வசதிகள் உ ள்ளன.

### தொடர்பு முகவரி

பரம்பரை அறங்காவலர்,
**அருள்மிகு செம்பொன்ஜோதீசுவரர் திருக்கோயில்**
இலாலாபேட்டை, கிருஷ்ணராயபுரம் வட்டம்,
கரூர் மாவட்டம்.

### கொங்கு ஏழு சிவத்தலங்கள்

திருக்கருவூர் ஆனிலை (கரூர்)
திருவெஞ்சமாங்கூடல்
திருப்பாண்டிக் கொடுமுடி (கொடுமுடி)
திரு நணா (பவானி)
திருப்புக்கொளியூர் அவிநாசி (அவிநாசி)
திருமுருகன் பூண்டி
திருக்கொடி மாடச் செங்குன்றூர் (திருச்செங்கோடு)



# அருள்மிகு யோகநரசிம்மசுவாமி திருக்கோவில்

## சிந்தலவாடி, கிருஷ்ணராயபுரம் வட்டம், கரூர் மாவட்டம்.

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு யோகநரசிம்ம பெருமாள் |
| இறைவி | அருள்மிகு மகாலட்சுமி |
| | இச்சன்னதி கருப்பத்தூர் அருள்மிகு சிம்மபுரீஸ்வரர் |
| | திருக்கோயிலில் உள்ளது |
| தீர்த்தம் | காவிரி |
| ஆகமம் | மத்வசம்பிரதாயம் |

**தலச்சிறப்பு**

வியாசராஜர் காலத்தில் திருக்காம்புலியூரில் வேதபாடச்சாலை நடத்தி வந்த ஸ்ரீமுஷ்ணம் ஆச்சாரியார் என்பவரது கனவில் நரசிங்கபெருமாள் தோன்றி கருப்பத்தூர் காவிரிக் கரையில் வண்ணான் ஒருவரின் துணிதுவைக்கும் கல்லாக தாம் கிடப்பதாகவும் தன்னை எடுத்து வரவும் தாம் எந்த இடத்தில் கனக்கிறேனோ, அவ்விடத்தில் தம்மை பிரதிஷ்டை செய்ய கூறினார் அவ்வாறே அவர் சுவாமியை எடுத்து வரும்போது இவ்விடத்தில் சுவாமி கனக்க, இங்கேயே ஸ்தாபித்ததாக தல வரலாறு தெரிவிக்கிறது.

**வரலாற்று சிறப்பு**

இத்திருக்கோவில் 600 ஆண்டுகள் பழமையானதாகும்

### தனிச்சிறப்பு

சிறந்த பிரார்த்தனை தலம், திருமணம், குழந்தை பேறு, கல்வி கடன் தொல்லை நீங்க வேண்டி பக்தர்கள் இத்திருக்கோயிலுக்கு வந்து வழிபடுகின்றனர்.

### இதரச்சிறப்புகள்

தாத்ரிஹவனம் எனப்படும் துளசிச் செடிக்கும் நெல்லி மரத்திற்க்கும் கார்த்திகை மாத துவாதசி (உத்வாண துவாதசி) அன்று திருக்கல்யாணம் நடத்தப்படுகிறது.

### திருவிழாக்கள்

ஸ்ரீ நரசிம்மஜெயந்தி, ஸ்ரீஅனுமத்ஜெயந்தி மற்றும் மத்வநவமி

### நடைதிறக்கும் நேரம்

காலை 8.00 மணிமுதல் பகல் 12.00 மணிவரை

மாலை 5.30 மணிமுதல் இரவு 8.00 மணிவரை

### பூஜை காலங்கள்

தினமும் ஒருகால பூஜை காலை 10.00 மணிமுதல் 12.00 மணிக்குள் நடைபெற்று வருகிறது.

### அமைவிடம்

கரூர் - திருச்சி நெடுஞ்சாலையில் சிந்தலவாடியில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது

### வழித்தடம்

கரூரிலிருந்தும் கிருஷ்ணராயபுரத்திலிருந்தும் பேருந்து வசதிகள் உள்ளன.

**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்
அருள்மிகு யோகநரசிம்மசுவாமி திருக்கோயில்
சிந்தலவாடி, கிருஷ்ணராயபுரம் வட்டம், கரூர் மாவட்டம்.
தொலைபேசி எண் : 04323 - 245522 (அய்யர்மலை.)
இ மெயில் - **eoyohanarasimmar@gmail.com**



# அருள்மிகு மகாலட்சுமி திருக்கோவில்

## மேட்டுமகாதானபுரம், கிருஷ்ணராயபுரம், கரூர் மாவட்டம்.

| | |
|---|---|
| இறைவி | அருள்மிகு மகாலட்சுமி அம்மன் |
| தீர்த்தம் | காவிரி |
| தல விருட்சம் | வில்வம் |
| ஆகமம் | சிவாகமம் |

### தல சிறப்பு

திருக்கோயில் மதிற்சுவர் கட்ட கோயிலின் பின்புறம் சுத்தம் செய்து அஸ்திவாரம் தோண்டியபோது தேங்காய் அமைப்பில் உள்ள 187 கல் தேங்காய்கள் கிடைக்கப்பெற்று உள்ளது.

### தல வரலாறு

பெருமிழலை நகரை ஆண்ட மன்னரின் பெயர் சிவபெருமான். இவரிடம் பணிபுரிந்தவர் குரும்பநாயனார். இவர் 63 நாயன்மார்களில் ஒருவர். அந்த ஊர் மக்கள் பக்தியில் சிறந்து விளங்கினர். குரும்பநாயனார் சுந்தரமூர்த்தி நாயனாரை வணங்கி வந்தார். அவரைத் தன் குருவாக ஏற்றுக்கொண்டார். இவர் ஆடிமாதம் சித்திரை நட்சத்திரத்தில் குரும்ப இனத்தில் பிறந்தார்.

தினமும் சிவனடியார்களுக்கு வேண்டிய உணவு, உடை மற்றும் பொருட்களை ஒரு கம்பளியில் கட்டி எடுத்து வந்து ஊர் எல்லையில் கொடுத்து அனுப்புவதை தனது கடமையாகக் கொண்டிருந்தார்.

குரும்ப இனத்தவரின் தொழில் ஆடு மேய்ப்பது ஆகும். ஆட்டின் முடியில் செய்த கம்பளியில் அந்த பொருட்களை எடுத்து வருவார். எல்லாரிடமும் பணிவாக நடந்து கொள்வார்.

இறைவனின் பாதங்களை தன் நெஞ்சில் வைத்து வணங்குவதையே தன் கடமை என எண்ணி வாழ்ந்து வந்தார். திருத்தொண்டத்தொகை பதிகங்களை பாடிய சுந்தரமூர்த்தி சுவாமிகளின் மீது அன்புகொண்டு வணங்கி வந்ததால் இவருக்கு அட்டமாசித்திகள் கிடைத்தன. “நமசிவாய....” என்னும் ஐந்தெழுத்து மந்திரத்தை ஓயாமல் சொல்லி வந்தார்.

இந்த நேரத்தில் சுந்தரமூர்த்தி நாயனாரை இறைவன் கைலாயத்திற்கு அழைக்க முடிவு செய்தார். இதை அறிந்த குரும்ப நாயனார், தன் குருவை பிரிந்து தனித்து வாழ இயலாது என வருந்தினார். தன் குருவுக்கு முன்னதாக யோக நெறியின் மூலம் சிவபெருமானின் திருவடியை சேர்வேன் என முடிவெடுத்தார். அதன்படியே சிவலோகத்திற்கும் சென்று சிவனின் திருவடியின் கீழ் அமர்ந்தார். பெரியபுராணத்தில் இந்த வரலாறு கூறப்பட்டுள்ளது.

குரும்ப நாயனாரின் குலதெய்வம் ஆதிமகாலட்சுமி. அசுரர்களும் தேவர்களும் பாற்கடலை கடைந்தபோது உருவானவள் மகாலட்சுமி. அப்போது பெருமாள் அமிர்தத்தை தேவர்களுக்கும், விஷத்தை அசுரர்களுக்கும் பங்கிட்டு கொடுத்துக் கொண்டிருந்தார். அந்தகாசூரன் என்பவன் இதை தனது ஞானத்தால் அறிந்துகொண்டு விஷத்திலிருந்து தப்பிக்க ஓடிச்சென்றான்.

அப்போது மகாலட்சுமியைப் பார்த்தான். அவள்மீது மோகம் கொண்டு அருகில் சென்றான். மகாலட்சுமி உடனே காவிரிக்கரை வழியாக ஓடிச்செல்லும் போது அசுரனும் விரட்டி வந்தான்.

அப்போது ஆடு மேய்க்கும் குரும்ப இனத்தவர்கள் மேட்டுமகாதானபுரம் என்ற இடத்தில் தங்கள் தொழிலை செய்து கொண்டிருந்தார்கள். மகாலட்சுமி அசுரனிடமிருந்து தப்ப குரும்பர் இனத்தவர் இருந்த இடத்தில் பூமிக்குள் ஒளிந்து கொண்டாள்.

அந்த இடத்தில் சிவபக்தனான ராவணன் ஈசனை நினைத்து தவமிருந்து கொண்டிருந்தான். மகாலட்சுமி அங்கு ஒளிந்திருப்பதை அறிந்த ராவணன் தன்னை அவள் அழிப்பதற்கே வந்திருக்கிறாள் எனக் கருதி இலங்கைக்கு சென்று விட்டான். அந்தகாசூரன் ராவணன் தவமிருந்த இடத்திற்குள் சென்று

மகாலட்சுமி குரும்பர்கள் கறக்கும் ஆட்டுப்பாலை அவர்கள் அறியாமலேயே குடித்துவந்தாள். இதை மக்கள் ஆச்சரியத்துடன் கவனித்தனர். ஒரு இடத்தில் ஈரமாக இருந்ததை பார்த்த மக்கள் அந்த இடத்தை தோண்டினர். அப்போது மகாலட்சுமி சுயம்புவாக காட்சியளித்து அசுரனிடமிருந்து தன்னை காக்க வேண்டுமென கேட்டுக்கொண்டாள்.

தெய்வமான மகாலட்சுமி மக்களிடம் தன்னைக் காக்க வேண்டும் என்று கூறியது அவர்களை சோதிக்கத்தான். உடனே மக்கள் மகாலட்சுமியை ஒரு கம்பளியில் சுற்றி மறைத்து வைத்து விட்டார்கள்.

அசுரன் இதைத் தெரிந்து கொண்டு அவர்களுடன் சண்டை செய்தான். அம்மனையும் சிறைபிடித்து விட்டான். மக்கள் இறைவனிடம் அந்த பெண்ணை காக்க வரவேண்டும் என வேண்டினர். முக்கண் உடைய சிவபெருமானை நினைத்து உருகி பாடல்கள் பாடினர். ஆனாலும் சிவபெருமான் வரவில்லை.

எனவே, முக்கண் உடைய தேங்காயை எடுத்து சிவபெருமான் அங்கு வரும் வரை தங்கள் தலையில் உடைத்து வணங்குவோம் என வேண்டிக்கொண்டு அவரவர் தலையில் தேங்காயை உடைக்கத் தொடங்கினார்கள். மக்களின் பக்தியை மெச்சிய சிவன் அங்கு தோன்றி அம்மனை காப்பாறினார்.

## தலப்பெருமை

செல்வத்தை அள்ளித்தரும் மகாலட்சுமிக்கு கரூர் மாவட்டம், கிருஷ்ணராயபுரம் தாலுக்காவில் உள்ள மேட்டு மகாதானபுரத்தில் கோயில் அமைக்கப்பட்டுள்ளது. இந்த கோயிலில் நடந்து வரும் விசித்திரமான வழிபாடு பக்தர்களை வியக்க வைக்கிறது.

ஆடிப்பெருக்கு திருவிழா இங்கு விசேஷமாக நடைபெறும். அன்று பக்தர்கள் மொட்டை அடித்து தங்கள் தலையில் தேங்காயை உடைத்து நேர்த்திக்கடன் செலுத்துகிறார்கள்.

இந்த அம்மன் கோவில் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கிருஷ்ணதேவராயரால் கட்டப்பட்டது. கோயிலை சுற்றிவர மூன்று பிரகாரங்கள் அமைக்கப்பட்டுள்ளன. சிற்பங்கள் அனைத்தும் மிக நேர்த்தியாக அமைக்கப்பட்டுள்ளது.

## பிரார்த்தனை

திருமணத் தடை, குழந்தை பாக்கியம், கல்வியில் சிறந்து விளங்க அம்மனை பிரார்த்திக்கலாம்.

## நேர்த்திக்கடன்

ஆடிப்பெருக்கு திருவிழா இங்கு விஷேசமாக நடைபெறும். அன்று பக்தர்கள் மொட்டை அடித்து தங்கள் தலையில் தேங்காயை உடைத்து நேர்த்திக்கடன் செலுத்துகிறார்கள்.

## திருவிழா

ஆடிப்பெருக்கு திருவிழா, விஜயதசமி இங்கு விசேஷமாக நடைபெறும்.

## நடை திறக்கும் நேரம்

காலை 9.00 மணி முதல் பகல் 11.00 மணி வரை

மாலை 5.00 மணி முதல் இரவு 7.30 மணி வரை

## பூஜை நேரம்

தினமும் ஒருகால பூஜை நடைபெற்று வருகிறது.

| | |
|---|---|
| காலை சந்தி | காலை மணி 9.00 - 11.00 |

## அமைவிடம்

கரூர் - திருச்சி தேசிய நெடுஞ்சாலையில் மகாதானபுரத்தில் இருந்து தெற்கே 2 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது.

## வழித்தடம்

கரூரிலிருந்தும் குளித்தலையிலிருந்தும் கிருஷ்ணராயபுரத்திலிருந்தும் பேருந்து வசதிகள் உள்ளன.

### தொடர்புமுகவரி

**செயல் அலுவலர்**

அருள்மிகு கடம்பவனேஸ்வரர் திருக்கோயில்,

குளித்தலை - 639 104. கரூர் மாவட்டம்.

போன் : 91 4323 225228

இணையதளத்தொடர்பு : www.kadambartemple.tnhrce.in

மின்னஞ்சல் : kadambarkoil@gmail.com



# அருள்மிகு சிம்மபுரீசுவரர் திருக்கோயில்

## கருப்பத்தூர், கிருஷ்ணராயபுரம் வட்டம்
## கரூர் மாவட்டம்.

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு சிம்மபுரீஸ்வரர் |
| இறைவி | அருள்மிகு சுகந்தகுந்தளாம்பிகை |
| தீர்த்தம் | காவிரி |
| தலவிருட்சம் | வில்வம் |
| ஆகமம் | காமிகம் |

### தலச்சிறப்பு

காலை கடம்பர், மதியம் சொக்கர், அந்தி திருவோங்கி நாதர், அர்த்தஜாமம் சிம்மபுரீஸ்வரர் திருக்கோயில்களை தரிசிக்க வேண்டிய பெருமை உடைய தலங்களில் ஒன்றாக இத்திருக் கோவில் விளங்குகிறது.

ஆதியில் கபிலன் என்ற மன்னரால் சுமார் 2000 ஆண்டுகளுக்கு முன்பு கட்டப்பட்ட தலம். இத்தலத்தின் சிவனை மகாலட்சுமி, பிரகலாதன், ஆஞ்சநேயர், அகத்தியர், இந்திரன், நாரதர், சோழ மகாராஜன், சூரியன் ஆகியோர் வழிபட்டுள்ளனர் என்பது புராணத்திலிருந்து தெரியவருகிறது.

### வரலாற்றுச் சிறப்பு

திருத்தலத்தைப்பற்றிய புராணம் வடமொழியில் தஞ்சை அரண்மனையிலிருந்து கிடைக்கப்பெற்று இராமசாமி சாஸ்திரிகளால் பனை ஓலைகளில் எழுதப்பட்டிருந்தது. அதனை ரா.துரைசாமி சாஸ்திரிகளால் கருப்பத்தூர் புராணம் என்ற பெயரில்

தமிழில் வெளியிட்டுள்ளார். அப்புத்தகத்தில் இத்திருத்தலம் ஆதியில் அகமோசனபுரம் என்றும், இறைவன் பச்சாத்தாபேஸ்வரர் என்றும் வழங்கி வந்துள்ளது. உக்கிர நரசிம்மமூர்த்தி இத்தலத்து இறைவனை பூஜித்து வழிபட்டதால் இத்தலம் சிம்மபுரி என்றும் வழங்கப்பட்டது.

## சிற்ப சிறப்பு

சிற்பங்கள் அனைத்தும் மிக நேர்த்தியாக அமையப்பட்டுள்ளது. திருநந்தி தேவருக்கு காதுகளின்றி காணப்படுவது மிகச்சிறப்பானதாகும்.

## தனிச்சிறப்பு

மகாலட்சுமி அம்மன் இத்திருத்தல இறைவனை பூஜித்து வழிபட்ட பெருமை உடையது. 48 நாட்கள் இலுப்பை எண்ணெய்யில் விளக்கேற்றி வழிப்பட்டு வந்தால் சந்தான பாக்கியம் கிட்டும். மஞ்சள் வளையல் சாத்தி அம்மனை வழிப்பட்டால் சுகப்பிரசவம் ஏற்படும்.

## உற்சவம்

தைப்பூச உற்சவத்தில் சுவாமி அம்பாள் ரிஷப வாகனத்தில் எழுந்தருளி குளித்தலை கடம்பன் துறையில் சந்திப்பு தீபாராதனை தீர்த்தவாரி உற்சவம் மிகச் சிறப்பாக நடைபெற்று வருறது.

## திருவிழா

பங்குனி உத்திர திருத்தேர் பிரம்மோற்சவம்

## நடைதிறக்கும் நேரம்

காலை 6.30 மணி முதல் பகல் 1.00 மணி வரை

மாலை 4.30 மணி முதல் இரவு 8.30 மணி வரை

## பூஜை காலங்கள்

தினசரி மூன்று கால பூஜைகள் நடைபெற்று வருகிறது

| | |
|---|---|
| காலைசந்தி | காலை 8.00 மணி |
| உச்சிகாலம் | பகல் 12.00 மணி |
| சாயரட்சை | மாலை 6.00 மணி |

### இதர சிறப்புகள்

நரசிம்மருக்கு தோஷம் நீங்கிய தலம், இந்திரன், அகத்தியர், சூரியன், நாரதர், பிரகலாதன் மற்றும் ஆஞ்சநேயர் வழிப்பட்ட தலம் ஆகும்.

### அமைவிடம்

திருச்சி, கரூர் தேசிய நெடுஞ்சாலையில் குளித்தலையிருந்து மேற்கே 8 கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. ரயில் மார்க்கத்தில் லாலாபேட்டை ரயில் நிலையத்திற்கு அருகில் அமைந்துள்ளது.

### வழித்தடம்

கரூரிலிருந்தும் திருச்சியிலிருந்தும் குளித்தலையிலிருந்தும் பேருந்து வசதிகள் உள்ளன.

### தொடர்புமுகவரி

**செயல் அலுவலர்,**
அருள்மிகு கடம்பவனேஸ்வரர் திருக்கோயில்,
குளித்தலை - 639 104. கரூர் மாவட்டம்.
போன் : 91 4323 225228
இணையதளத்தொடர்பு : www.kadambartemple.tnhrce.in
மின்னஞ்சல் : kadambarkoil@gmail.com

### பஞ்ச கிருஷ்ணாரண்ய க்ஷேத்திரங்கள்

1. திருக்கோவிலூர்
2. திருக்கண்ணங்குடி
3. திருக்கபித்தலம்
4. திருக்கண்ணபுரம்
5. திருகண்ணமங்கை



# அருள்மிகு நீலமேகப் பெருமாள் திருக்கோயில்

## குளித்தலை நகர் & வட்டம், கரூர் மாவட்டம்.

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு நீலமேகப் பெருமாள் |
| இறைவி | அருள்மிகு கமலநாயகித் தாயார் |
| தீர்த்தம் | காவிரி |
| தலவிருட்சம் | வேம்பு |
| ஆகமம் | வைகானஸம் |

**தலச்சிறப்பு**

சோழர்கள், பாண்டியர்கள், பல்லவர்கள், ஹொய்சாளர்கள், என பல்வேறு மன்னர்களாலும் திருப்பணிகள் செய்விக்கப்பட்டது இத்திருக்கோயிலின் தனி சிறப்பாகும்.

**வரலாற்றுச் சிறப்பு**

இத்திருக்கோயில் 1000 ஆண்டுகளுக்குமேல் பழமையானது. இராஜராஜ சோழன் காலத்திய கல்வெட்டுகள் உள்ளன. கி.பி. 1258ல் ஆட்சி செய்த ஹொய்சாள மன்னன் கல்வெட்டுகள், பராக்கிரம பாண்டியன் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. 14ம் நூற்றாண்டில் வீரபாண்டியனால் கற்றளியாக கட்டப்பட்டது.

## சிற்பச் சிறப்பு

கருவறையில் அர்ச்சாவதார மூர்த்தியாக நிற்கும் நீல மேகனின் திருமேனி சாளக்கிராமச் சிலையோ என ஐயுறும் வண்ணம் சிறப்பாக உள்ளது. நெடிதுயர்ந்த உருவம், நான்கு திருக்கரங்களில் மேல் இரண்டு கரங்களில் பாஞ்சஜன்யம், சுதர்சனம் (அதாவது சங்கு சக்கரம்), வலதுகரம் அபய முத்திரையுடன் தன்னை நாடிவரும் பக்தர்களுக்கு வள்ளலாக தன் அருளினை வாரி வாரி வழங்கும் அருட்தெய்வமாக விளங்குகிறார். நீலமேகனின் தென்புறம் தனிசந்நிதியில் அழகிய பிராட்டியின் திருவுருவம் கமலநாயகி தாயார் என்னும் திருநாமத்துடன் திகழ்கிறார். இத்திருக்கோயிலில் உள்ள எம்பிராட்டியார் கரங்கள் இரண்டிலும் மலர்ந்த தாமரையை ஏந்தி அபய வரத முத்திரையுடன் நான்கு கரத்துடன் அமர்ந்து அருள் பாலிக்கிறார்.

## தனிச்சிறப்பு

திருமண தடைக்கு பெருமாளுக்கு பிரார்த்தனை திருக்கல்யாணமும், குழந்தை வரம் பெற தவழும் கிருஷ்ணனுக்கு பூஜையும் பிரார்த்தனையாக செய்விக்கப்படுகிறது.

## உற்சவங்கள்

சித்திரை வருடப்பிறப்பு, சித்ரா பௌர்ணமி, ஸ்ரீராமநவமி இலட்சார்ச்சனை விழா, புரட்டாசி சனிக்கிழமைகள், நவராத்திரி 9 நாள் ஸ்ரீதாயார் கொலு வீற்றிருத்தல், விஜயதசமி, திருக்கார்த்திகை அன்று ஸ்ரீ பெருமாள் திருவீதிவுலா, தனுர்மாத பூஜை, ஸ்ரீ ஆஞ்சநேயர் ஜெயந்தி, பகல் பத்து மற்றும் இராபத்து உற்சவம். ஆஞ்சநேயர் சன்னதியில், சனிக்கிழமைகளில் வடைமாலை சாற்றுதல் சிறப்பு ஆகும்.

## திருவிழா

வைகாசி விசாகத் திருவிழா

## நடைதிறக்கும் நேரம்

காலை 7.00 மணி முதல் பகல் 11.30 மணிவரை
மாலை 5.30 மணிமுதல் இரவு 8.30 மணிவரை



### பூஜை காலங்கள்

தினசரி நான்கு கால பூஜைகள் நடைபெற்று வருகிறது.

| | |
|---|---|
| காலை சந்தி | காலை 6.00 மணி முதல் 7.00 மணிவரை |
| உச்சிக்காலம் | பகல் 11.30 மணி முதல் 12.00 மணிவரை |
| சாயரட்சை | மாலை 5.30 மணி முதல் 6.00 மணிவரை |
| அர்த்தஜாமம் | இரவு 8.30 மணி முதல் 9.00 மணிவரை |

### அமைவிடம்

திருச்சி – கரூர் சாலையில் குளித்தலை நகரின் மையப்பகுதியில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

### வழித்தடம்

திருச்சியிலிருந்தும், கரூரிலிருந்தும் பேருந்து வசதிகள் உள்ளன. குளித்தலையில் இரயில் நிலையம் உள்ளது.

### தொடர்பு முகவரி

செயல் அலுவலர்
அருள்மிகு இரத்தினகிரீஸ்வரர் திருக்கோயில்
அய்யர்மலை
சிவாயம் அஞ்சல் 639 120.
குளித்தலை வட்டம், கரூர் மாவட்டம்.
தொலைபேசி எண் : 04323 245522
இணையதளம் **www.ayyarmalai.tnhrce.in**
இமெயில் **eoayyarmalai@gmail.com**



# அருள்மிகு சிவபுரீவரர் திருக்கோயில்

**சிவாயம், குளித்தலை வட்டம், கரூர் மாவட்டம்.**

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு சிவபுரீஸ்வரர் |
| இறைவி | அருள்மிகு பெரியநாயகி |
| தீர்த்தம் | காவேரி |
| தலவிருட்சம் | வில்வம் |
| ஆகமம் | காமிக ஆகமம் |

**வரலாற்றுச் சிறப்பு**

சோழர்காலத்தில் கற்றளியாக கட்டப்பட்டுள்ளது. இத்திருக்கோயிலில் ஆறு கல்வெட்டுகள் உள்ளன.

**சிற்பச் சிறப்பு**

நடராஜர் விக்கிரகம் மிகுந்த கலை அழகுடன் திகழ்கிறது.

**தனிச் சிறப்பு**

உயர்ந்து விளங்கும் ராஜகோபுரம், உட்கோபுரத்துடன் கூடிய இரு பிரகாரங்களை கொண்டது இத்திருக்கோயில்.

**திருவிழா**

மார்கழி மாத திருவாதிரை (ஆருத்ரா) தரிசனம் சிறப்பு

**நடைதிறக்கும் நேரம்**

காலை 8.00 மணிமுதல் பகல் 12.00 மணிவரை
மாலை 5.00 மணிமுதல் இரவு 8.00 மணிவரை

### பூஜை காலங்கள்

தினசரி மூன்று கால பூஜைகள் நடைபெற்று வருகிறது.

| | |
|---|---|
| காலை சந்தி | காலை மணி 8.30 |
| உச்சிக்காலம் | பகல் மணி 11.30 |
| சாயரட்சை | மாலை மணி 5.30 |

### இதர சிறப்புகள்

அய்யர்மலையில் நடைபெறும் சித்திரை பிரமோற்சவம் மற்றும் தைப்பூச திருவிழாவிற்கு இத்திருக் கோயிலின் உற்சவ விக்கிரங்களை எடுத்துச் சென்று விழா நடத்துவது வழக்கம்.

### அமைவிடம்

மணப்பாறை - குளித்தலை சாலையில் அய்யர்மலைக்கு தென்கிழக்கே 2 கி.மீ. தொலைவில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

### வழித்தடம்

மணப்பாறையிலிருந்தும், குளித்தலையிலிருந்தும் பேருந்து வசதிகள் உள்ளன.

### தொடர்பு முகவரி

செயல் அலுவலர்
அருள்மிகு ரத்தினகிரீஸ்வரர் மலைக்கோவில்
அய்யர்மலை, வாட்போக்கி, சிவாயம் அஞ்சல் - 639 120.
வைகைநல்லூர் வழி, குளித்தலை வட்டம், கரூர் மாவட்டம்.
தொலைபேசி எண் : 04232 - 245522
இணைய தளம் : www.ayyarmalai.tnhrce.in
E-mail : eoayyarmalai@gmail.com

### சிவத்தலங்களில்

சிதம்பரத்தை தரிசித்தாலும்
திருவண்ணாமலையை நினைத்தாலும்
திருவாரூரில் பிறந்தாலும்
காசியில் இறந்தாலும்
மோட்சம் உண்டாகும்.



# அருள்மிகு காசிவிசாலாட்சி உடனுறை அருள்மிகு காசிவிசுவநாத சுவாமி திருக்கோயில்

## நெரூர், கரூர் மாவட்டம்.

## ஸ்ரீ சதாசிவபிரம்மேந்திராள் அதிஷ்டானம்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு காசிவிசுவநாதசுவாமி |
| இறைவி | அருள்மிகு காசிவிசாலாட்சி |
| தலவிருட்சம் | வில்வம் |
| தீர்த்தம் | காவிரி |
| ஆகமம் | காமிக ஆகமம் |

**ஸ்ரீ சதாசிவபிரம்மேந்திராள் சரித்திரம்**

350 ஆண்டுகளுக்கு முன் மதுரையம்பதியிலே சோமநாத யோகி, பார்வதி தேவி தம்பதியர் நெடுங்காலம் நித்திய நியமத்தோடு இராமநாமத்தை அப்யாசம் செய்து வந்தனர். அவ்வமயம் இருவருமாக யாத்திரை சென்று இராமேஸ்வரத்திலே தங்கி இருக்கின்ற காலத்திலே ஒருநாள் பார்வதி தேவியின் சொப்பனத்திலே ஒரு சத்புத்திரன் வாய்ப்பான் என்று இராமநாதசுவாமியின் அனுக்கிரகம் கிடைத்தது. அவ்வாறு பிறந்த குழந்தையே ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திராள் அவருக்கு சிவராமகிருஷ்ணன் என பெற்றோர் பெயர் சூட்டி மகிழ்ந்தனர்.

### பதவியும் பணியும்

முன்னைப் பிறவியில் செய்த முதுதவம் பின்னைப்பிறவியில் பெற்றால் அறியலாம் என்ற திருமூலர் வாசகத்திற்கு உதாரணமாக வெகு சீக்கிரத்தில் சாஸ்திரங்களை அறிந்து கொண்டார் சிவராம கிருஷ்ணன். பின்னர் மைசூர் சமஸ்தானத்தில் வித்வானாக பதவி வகித்தார்.

### தவமும் யோகமும்

ஒரு சமயம் குருநாதரான பரமசிவேந்திராளை வணங்கி எழுந்து நின்ற நிலையில், குருநாதர் ஊரார் வாயெல்லாம் அடக்கக் கற்ற நீ உன் வாயை அடக்கக் கற்றுக் கொள்ளவில்லையோ எனக் கேட்டார். சிவராமகிருஷ்ணனும் அந்த நிமிடத்திலிருந்து இனி பேசுவதில்லை என்று தீர்மானித்து மெளனியானார். குருநாதரும் அவருக்கு சந்நியாசம் கொடுத்து சதாசிவம் என்ற பெயரையும் சூட்டி உனக்குப் பிரியமான இடத்திற்கச் சென்று நீ தவம் இயற்றலாம் எனச் சொல்லி விட்டார். சதாசிவமும் புறப்பட்டு நெரூர் வந்து சேர்ந்தார். நெரூரை அடைந்த சதாசிவம் தவம் பண்ணுவதற்குத் தகுந்த இடம் என அறிந்து தங்கினார்.

சகல கலை ஞானம் உள்ளத்தே நிரம்பி இருக்கிறது. அய்யாவாள், பரமவேந்திராள் இருவரிடமும் சகல சாஸ்திரங்களையும் கற்றறிந்தார். மந்திரயோகம், பரிச யோகம், பாவயோகம், அபாவயோகம், மகா யோகம் என்று ஐந்து யோகங்களையும் அனுபவிக்க ஆரம்பித்தார்.

### சித்திகள்

சதாசிவ பிரம்மேந்திராள் தொடர்ந்து பலப்பல சித்திகள் செய்து வந்தார். புதுக்கோட்டை மகாராஜா விஜயரகுநாத தொண்டைமான் சாதுக்களிடத்திலே பிரியமுள்ளவர். ஒரு தினம் தமக்கு தீட்சை தர வேண்டுமென பிரம்மத்திடம் விரும்பிக் கேட்டார் மகாராஜா. பிரம்மமும் மகாராஜாவுக்கு தீட்சை தரலாம் என எண்ணினார் போலும். மணலிலே மந்திரத்தை எழுதிக் காண்பித்தார். அந்த மந்திரத்தை மகாராஜா கற்றுக்கொண்டு இந்த மணலை தன் அங்க வஸ்திரத்தில் எடுத்துக்கொண்டு அரண்மனை சென்று தங்கப்பேழையில் வைத்து பூஜை செய்யத் தொடங்கினார். அந்தப் பூஜை இன்றும் புதுக்கோட்டை அரண்மனையில் நடந்து வருகிறது.

கரூரில் வசித்து வந்த சாஸ்திரிகளும் கனபாடிகளும் ஒரு சமயத்திலே சதாசிவ பிரம்மத்தை அணுகி, திருப்பதி சென்று வேங்கடாஜலபதியைத் தரிசித்து ஆசி பெற்று வருவது மிகவும் சிரமமாக இருக்கிறது. ஆகவே தேவரீர் எங்களை ஆசீர்வதித்து திருப்பதி வேங்கடாஜலபதியைத் தரிசித்தால் என்ன நன்மை உண்டாகுமோ அந்த நன்மை தான்தோன்றிமலை அப்பரைத் தரிசிக்க உண்டாக வேண்டுமாய் அருள் புரிய வேண்டும் என வேண்டினர். அந்தக் காலத்தில் திருப்பதி செல்வதென்றால் கட்டை வண்டியில் உணவும், மாடுகளுக்குத் தீவனமும் கொண்டு செல்ல வேண்டும். அவர்கள் படும் இடர்களோ அளவில்லை. சதாசிவ பிரம்மமும் மகிழ்ச்சியோடு தான்தோன்றிமலை சென்று தான்தோன்றி மலையப்பரைப் பூஜித்து ஜன ஆகர்ஷ்ண சக்கரம் ஒன்று எழுதி பூஜை செய்து அங்கு அமைத்தார். ஆகையால் அன்றும் இன்றும் தாந்தோன்றிமலையில் வேண்டுவோர் வேண்டுவது கிடைக்கப்பெறுகிறது. புரட்டாசி மாதம் மூன்றாவது வாரம் சற்குரு சதாசிவம் தான்தோன்றிமலை அப்பரை பூஜை செய்த நாளை இப்போதும் மக்கள் சிறப்பாகக் கொண்டாடி வருகின்றனர்.

### புன்னைவன நல்லூர் அருள்மிகு மாரியம்மன்

தஞ்சாவூருக்கருகில் 3 கல் தொலைவில் புன்னைவனக் காடுகள் உண்டு. அங்குள்ள புன்னைவனம் மாரியம்மன் கோவில் இன்றும் மிகவும் பிரசித்தமானது. அன்று அந்த புன்னை மரக்காடுகளிலே மகாராஜவாயினும் அதிக தூரம் நடந்தும் சற்றே குதிரையேறியும் இராமேஸ்வரம் செல்லுவது வழக்கம். அவ்வாறு தஞ்சாவூர் மகாராஜா தனது பெண் குழந்தையுடன் இராமேஸ்வரம் சென்று திரும்பினார். உஷ்ணம் பொங்கி குழந்தையின் கண்களிலிருந்து இரத்தம் வடிந்தது. பல ஓளஷதங்களைப்பரீட்சித்தும் குணம் காணவில்லை. ஆகவே மகாராஜா சமயபுரம் மாரியம்மனுக்கு வேண்டுதல் செய்தார். குழந்தையின் கண் நோய் நீங்கினால்தங்கத்தினால் கண் செய்து வைப்பதாக வேண்டிக் கொண்டார். அன்று இரவே மகாராஜாவின் கனவில் நான் இங்கிருக்க நீ சமயபுரம் போவதென்ன? என அம்மன் திருவுளமருளினார். விழித்துக் கொண்ட மகாராஜா தம் இராஜ்ஜியத்திலேயே அம்மன் எழுந்தருளியிருக்க நாம் அறியாதுபோனோமே என வருந்தி, மந்திரி பிரதானிகளை அம்மன் எழுந்தருளியுள்ள இடத்தைக் கண்டுபிடிக்க நாலா பக்கங்களிலும் அனுப்பி வைத்தார்.

எங்கு தேடியும் மாரியம்மன் கோவில் கிடைக்க வில்லை. ஓரிடத்தில் ஒரு புற்றுக்கு வேப்பிலை வைத்துச் சின்னக் குழந்தைகள் மாரியம்மன் பேர் சொல்லி விளையாடிக் கொண்டிருந்தார்கள். இதை மகாராஜாவிடம் வந்து கூறினர். மகாராஜாவும் பிரதானிகளுடனே புன்னை வனக் காடுளைச் சுற்றி வந்தார். இக்காடுகளில் ஏதோ ஒரு அதிசயம் உண்டென அவரது உள்ளுணர்வு சொல்லிற்று. அப்போது ஒரு புன்னை மரத்திடியிலே சதாசிவ பிரம்மம் வீற்றிருப்பதைக் கண்ட பிரதானிகள் மகாராஜாவை அவரிடம் அழைத்துச் சென்றனர்.

கண்ணால் கண்டவுடனே பெரிய மகான் என அறிந்து கீழே விழுந்து வணங்கி எழுந்து அவரிடம், இங்கு மாரியம்மன் கோவில் உள்ளதாக சொப்பனம் கண்டேன். ஆனால் மாரியம்மன் கோவிலைக் காணேன். வேப்பிலை சொருகி புற்றருகே குழந்தைகள் விளையாடுவதைத் தான் கண்டேன். தாங்கள் திருவுளம் கொண்டு தெரிவிக்க வேண்டும் என பிராத்தித்தார். பிரம்மம் அந்தப் புற்றேதான் மாரியம்மன் என்றார். மகாராஜா அதற்கு, இப்படி இருந்தால் வழிபாடு எப்படிச் செய்யமுடியும்? தாங்கள் தான் உருவம் வகுத்துக் கொடுக்க வேண்டும் எனப் பிரார்த்தித்தார். பிரம்மம் அவருக்கு அஷ்ட கந்தங்களைப் பற்றிச் சொன்னார். சாம்பிராணி, புனுகு, ஜவ்வாது, கஸ்தூரி, கோரோசனை, அகில், சந்தனம் குங்குமப்பூ, பச்சைக்கற்பூரம் ஆகிய சாமான்களைக் கொண்டு வரச்சொல்லி அந்த மண்ணிலேயே பிசைந்து சதாசிவ பிரம்மமே அந்த மாரியம்மனைச் செய்தார்.

ஜன ஆகர்ஷ்ண சக்கரம் ஒன்று எழுதி அம்மன் முன்னால் வைத்து இதைப் பூஜை செய்ய குழந்தைக்குக் குணம் கிடைக்கும் என்றருளினார். அவ்வாறே குழந்தையும் நலம் பெற்றது.

சதாசிவ பிரம்மம் பஞ்ச யோக சித்தி பெற்ற பின் ஒருசமயம் சித்தம் பகிர்முகப்பட்ட ஒரு சந்தர்ப்பத்தில இளமைப் பருவத்தில் தம்மோடு கற்ற கோவிந்தபுரம் போதேந்திராள் ராமநாமத்தை யோக வலிமையால் பிரம்மேந்திராளுடைய உடலுக்குள் புகுத்தினார். போதேந்திராள் ராமநாம சித்தாந்தம் செய்தவராயிற்றே! சதாசிவ பிரம்மமும் ராமநாமத்திற்கு அதிக மகிமை கொடுத்து கீர்த்தனைகள் பாடியிருக்கிறார்.

### ஜீவசமாதி அடைதல்

நாம் வேண்டாம் என்று சொன்னாலும் அவன் செய்த வினையின் பயனை அடுத்த பிறவியிலேனும் அனுபவிக்க வந்து விடுமே. அப்பேற்பட்ட பாதகங்களை அனுபவிப்பதற்கு ஏதுவாக உடலை மறந்து நாம் ஏன் திரிய வேண்டும்? சுற்றியது போதும் என தீர்மானித்துக் கொண்டு நெரூர் வந்து சேர்ந்தார். சதாசிவ பிரம்மம்.

நெரூர் வந்து சேர்ந்தவுடனே யோகவலிமையினாலே தமது சீடர்களான புதுக்கோட்டை மகாராஜா, மைசூர் மகாராஜா, தஞ்சாவூர் மகாராஜா மூவரையும் தீர்க்கமாக நினைத்தார். மூவரும் விரைவாக வந்து சேர்ந்தனர். குகையமையுங்கள். நான் உட்கார்ந்ததும் சாமக்கிரியைகளால் மறைத்து விடுங்கள் என்றார். அவர்கள் அழுதனர். அதற்கு பிரம்மம் மனதால் தானே நினைக்க வேண்டும்? உடலைப் பார்த்துக் கொண்டிருந்து என்ன செய்யப் போகிறீர்கள்? காவேரியில் கூடப் புதைந்து கிடந்தேன். எப்படி வேண்டுமானாலும் நான் இருப்பேன். சொன்னபடி செய்யுங்கள் என்று கூறினார்.

திருமூலர் தமது திருமந்திரத்தில் குகையமைக்கும் முறையினை விரிவாகக் கூறியுள்ளார். அதன்படி முறையாகக் குகை அமைத்தார்கள்.

உட்காரும் போது போடக்கூடிய சாமான்களையெல்லாம் சதாசிவ பிரம்மம் அவர்களுக்கு அறிவித்தார். விபூதி, உப்பு, மஞ்சள்தூள் செங்கற்பொடி போட்டு மூடிவிடுங்கள். ஒன்பதாம் நாள் சிரசின்மேல் வில்வவிருட்சம் தோன்றும். பன்னிரண்டாம் நாள் காசியிலிருந்து சிவலிங்கம் வரும். அதை 12 அடிக்குக் கீழ்புறம் வைத்துக் கோயில் கட்டுங்கள். இந்த வில்வ விருட்சத்திற்கு எந்த மறைப்பும் பண்ண வேண்டாம் மேடை போட்டு விடுங்கள் என்று கூறியருளினார்.

சதாசிவ பிரம்மம் தெரிவித்த நாளில் குகையில் வந்து அமர்ந்து விட்டார். அந்த நாளுக்குள்ளாகவே மகாராஜாக்களும் வேண்டிய சாமான்களைச் சேகரித்துக் கொள்ள பக்த மகாஜனங்கள் பெருந்திரளாகக் கூடினார்கள். உள்ளே உட்கார்ந்தவுடனே எல்லாச் சாமான்களும் போட்டு மூடினார்கள். தோத்திரம் பண்ணினார்கள். ஒன்பதாம் நாள் வில்வமரம் தோன்றியது. பன்னிரண்டாம் நாள்

அவர் சொன்னபடியே காசியிலிருந்து ஒரு பிரம்மச்சாரி சிவலிங்கம் கொண்டு வந்தார். 12 அடிக்குக் கீழ்புறம் வைத்துச் சிவன் கோயில் கட்டினர் மகரிஷிகளின் சமாதி மீதே கோவில் கட்டுவது வழக்கம். நெரூர் மட்டுமே சமாதிக்கு 12 அடிக்குக் கீழ்புறம் சிவலிங்கத்தை அமைத்துக் கோவில் கட்டப்பட்டுள்ளது. இங்கு துவாதசாந்தப் பெருவெளியில் ஸ்ரீசதாசிவ பிரம்மம் எழுந்தருளியிருக்கிறார். இவ்வாறாக சதாசிவ பிரம்மம் நெரூரில் ஜீவசமாதி அடைந்த அதே நேரத்தில் அதே போல் மானாமதுரை, கராச்சி ஆகிய இரு இடங்களிலும் சமாதியடைந்ததாகக் கருதப்படுகிறது.

### திருப்பணியும் கும்பாபிஷேகமும்

இத்திருக்கோவிலுக்கு 27.01.2010 அன்று மகா கும்பாபிஷேகம் நடைபெற்றது.

### உற்சவங்கள்

குருவாரங்கள், பௌர்ணமி, ஆடி 18 மற்றும் நவராத்திரி உற்சவங்கள், ஸ்ரீசதாசிவ பிரம்மமேந்திராள் ஆராதனை – சித்திரை சுக்கிலபட்ச தசமி

### நடைதிறக்கும் நேரம்

காலை 7.30 மணிமுதல் பகல் 12.00 மணிவரை

மாலை 4.00 மணிமுதல் இரவு 8.00 மணிவரை

### பூஜைநேரம்

தினமும் ஒரு கால பூஜை நடைபெற்று வருகிறது.

| | |
|---|---|
| காலை சந்தி | காலை 8.00 மணி |

### அமைவிடம்

கரூர் நகரிலிருந்து சுமார் 15 கி.மீ. தொலைவில் காவிரி நதிக்கரையில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

### வழித்தடம்

கரூர் பேருந்து நிலையத்திலிருந்து பேருந்துகளும், சிற்றுந்துகளும் தானியங்கி வசதிகளும் உள்ளன. இரயில் மார்க்கத்தில் கரூர் சந்திப்பும் உள்ளது.

### தொடர்பு முகவரி

செயல் அலுவலர்
அருள்மிகு புதுக்கோட்டைத் திருக்கோயில்கள்
அரசு பொது அலுவலக கட்டிட வளாகம்
புதுக்கோட்டை – 622001
தொலைபேசி – 04322 – 221084

# அருள்மிகு மெய்பொருள்நாத சுவாமி திருக்கோயில்

மொடக்கூர், கோவிலூர் (எ) சௌந்திராபுரம்
அரவக்குறிச்சி வட்டம், கரூர் மாவட்டம்



சுவாமி சன்னதி பின்புறத் தோற்றம்



இராஜகோபுர விதான புடைப்புச் சிற்பங்கள்



புகழ்ச்சோழர் மண்டபம்

## அய்யர்மலை அருள்மிகு இரத்தினகிரீஸ்வரர் திருக்கோவில்

அய்யர்மலை முழுத்தோற்றம்





பொன்னிடும் பாறைக்குமுன் அமைந்துள்ள கற்கம்பம்

அருள்மிகு கல்யாண வெங்கடரமணசுவாமி திருக்கோயில்,
தாந்தோன்றிமலை.



தாந்தோன்றிமலை.








ஸ்ரீ சதாசிவபிரமேந்திராள் அதிஷ்டானம்
நெரூர்

மாண்புமிகு. **தமிழக முதல்வர் அம்மா** அவர்கள்

அறிவித்த அன்னதான திட்டத்தின் படி

## கரூர் மாவட்டத்தில் அன்னதானம் நடைபெறும் திருக்கோயில்கள் விபரம்

| வ. எண் | திருக்கோவில் பெயர் மற்றும் முகவரி | நாள் 1 – க்கு பயனாளிகள் | நாள் 1 – க்கு உபயதாரர் திட்டநிதி | தொடர்பிற்கு |
|---|---|---|---|---|
| 1. | அ/மி கல்யாண வெங்கடரமண சுவாமி திருக்கோயில், தான்தோன்றிமலை, கரூர் வட்டம் & மாவட்டம். | 100 | 2000 | 04324-257531 |
| 2. | அ/மி கல்யாண பசுபதீஸ்வர சுவாமி திருக்கோயில், கரூர் நகரம், கரூர் வட்டம் & மாவட்டம். | 100 | 2000 | 04324-262010 |
| 3. | அ/மி மாரியம்மன் திருக்கோயில், தேர் வீதி, கரூர் நகரம், கரூர் வட்டம் & மாவட்டம். | 100 | 2000 | 04324-264146 |
| 4. | அ/மி இரத்தினகிரீஸ்வர சுவாமி திருக்கோயில், அய்யர்மலை, குளித்தலை வட்டம், கரூர் மாவட்டம். | 50 | 1000 | 04323-245522 |
| 5. | அ/மி கடம்பவனேஸ்வர சுவாமி திருக்கோயில், கடம்பர்கோயில், குளித்தலை வட்டம், கரூர் மாவட்டம். | 50 | 1000 | 04323-225228 |
| 6. | அ/மி பாலசுப்பிரணிய சுவாமி திருக்கோயில், வெண்ணெய்மலை, கரூர் வட்டம் & மாவட்டம். | 50 | 1000 | 04324-220106 |
| 7. | அ/மி காளியம்மன் (ம) மாரியம்மன் திருக்கோயில், தாந்தோன்றிமலை. கரூர் வட்டம் & மாவட்டம். | 50 | 1000 | 04324-262010 |
| 8. | அ/மி செல்லாண்டியம்மன் திருக்கோயில், நொய்யல். அரவக்குறிச்சி வட்டம், கரூர் மாவட்டம். | 50 | 1000 | 04324-257531 |
| 9. | அ/மி காசிவிசுவநாத சுவாமி திருக்கோயில், அரவக்குறிச்சி. அரவக்குறிச்சி வட்டம், கரூர் மாவட்டம். | 50 | 1000 | 04324-257531 |

**அன்னதான திட்டத்தில் அன்னதான திட்ட நன்கொடை வைப்பு நிதி**

நாள் 1 – க்கு 100 நபர்களுக்கு ரூ. 25,000/- மும்
நாள் 1 – க்கு 50 நபர்களுக்கு ரூ. 15,000/- மும்
நாள் 1 – க்கு 25 நபர்களுக்கு ரூ. 10,000/- மும்

செலுத்தினால் உபயதாரர்கள் குறிப்பிடும் நாளில் அத்திருக்கோவில்களில் அன்னதானம் வழங்கப்படும். மேலும் அன்னதான நன்கொடை செலுத்துபவர்களுக்கு வருமானவரிச் சட்டம் 80(G) – ன் கீழ் வருமான வரி விலக்கும் உள்ளது.




# திங்கள் இதழை வாங்கி படியுங்கள்

## சந்தா விபரம்

| | | |
|---|---|---|
| தனி இதழின் விலை | ரூ. | 15.00 |
| ஓராண்டுச் சந்தா | ரூ. | 180.00 |
| ஐந்தாண்டுச் சந்தா | ரூ. | 900.00 |
| பத்து ஆண்டுச் சந்தா | ரூ. | 1800.00 |
| ஆயுட்காலச் சந்தா | ரூ. | 2700.00 |

(ஆயுட்காலம் என்பது
அதிக பட்சமாக 15 ஆண்டுகள் மட்டும்)

இதற்கான பணவிடையை / வங்கி வரைவோலையை
Commissioner, HR & CE Dept., Chennai-34
என்ற முகவரிக்கு அனுப்பவும்.